# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தற்கால மக்களின் ஆன்மிக மறுமலர்ச்சிக்கு ஏற்ற வகையில் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர் காட்டிய வழியில் மத உண்மைகளை இந்த மாதப் பத்திரிகை வெளியிட்டு வருகிறது.

சந்தா விவரம்

| | |
|---|---|
| வருட சந்தா | ரூ. 12 |
| ஆயுள் சந்தா | ரூ. 150 |
| தனிப் பிரதி | ரூ. 1-20 |

*ஆயுள் சந்தாவை மொத்தமாகவோ, பகுதி பகுதியாகவோ, மாதம் ரூ. 15 ஆகவோ ஒரு வருடத்திற்குள் செலுத்தலாம்.*

*வருட சந்தாதாரர்களை ஆயுள் சந்தாதாரர்களாகப் பதிவு செய்து கொள்வதன் மூலம் பத்திரிகையின் வளர்ச்சிக்கு உதவி புரியக் கோருகிறோம். ஆயுள் சந்தா என்பது 35 ஆண்டுகளுக்குப் பத்திரிகை அனுப்பப்படும் என்பதை குறிக்கிறது.*

## வேண்டுகோள்

1. மக்களுக்கு உணவு உடை வழங்கி உடல் சம்பந்தமான தேவைகளைப் பூர்த்தி செய்வது மிகவும் நல்ல உதவி ஆகிறது. கல்வி, தொழில் முதலியவற்றைக் கற்பித்து ஜீவனோபாயத்திற்கு வழிவகுத்துத் தருவது அதனினும் மேலான சேவை ஆகிறது. ஆன்மிக சம்பந்தமான நூல்களைப் படித்தும் கேட்டும் ஆத்மசாதனங்களில் ஈடுபடச் செய்வது தலையாய கைங்கரியமாகிறது. தானங்களிலேயே மிகச் சிறந்த தானம் ஞானதானம் என்பது ஆன்றோர் கண்ட உண்மை.

   வாசக அன்பர்கள் தங்களின் சந்தாவைச் செலுத்துவதுடன், மேலும் தமது நண்பர்கள் சிலரையும் சந்தாதாரர்களாகச் சேர்த்துத் தருவது ஒரு நல்ல தொண்டாகும். இந்தப் புனித மதத் தொண்டில் சிரத்தையுடன் ஈடுபடுவது நமக்கும் மற்றவர்களுக்கும் பெருநலன் தரும்.

2. அன்பர்கள் தங்களின் தெய்விகக் கைங்கரியமாக கல்வி ஸ்தாபனங்கள், சத்சங்கங்கள் முதலியவைகளுக்குப் பத்திரிகை போய்க்கொண்டிருக்கும்படி செய்யலாம். இது ஒவ்வொரு மாதமும் தாங்கள் அளிக்கும் மேலான நன்கொடையாகவும், தங்களை ஞாபகப்படுத்தும் சிறந்த வெகுமதியாகவும் அமையும்.

3. அன்பர்கள் தங்களால் இயன்ற ஒரு சிறிதளவிற்காகிலும் புதிய சந்தாதாரர்களைச் சேர்த்துத் தரும் விஷயத்தில் முயற்சி செய்வார்கள் என்று நம்புகிறோம். குறைந்தது மூன்று சந்தாதாரர்களையாவது சேர்த்துத் தருவது மிகப் பெரிய உபகாரமாக இருக்கும். இதன் மூலம் இன்றைய சமுதாயத்தின் சூழ்நிலையில் நல்ல கருத்துகள் வளர அரும்பெரும் தொண்டு செய்தவர்களாகிறீர்கள்.

4. புதிய சந்தாதாரர்கள் பணம் அனுப்பி வைக்கும்போது புதிய சந்தா என்று குறிப்பிட்டு எழுதும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். பழைய சந்தாதாரர்கள் தமது கடிதப் போக்குவரத்துகள் எல்லாவற்றிலும் சந்தா எண்ணையும் முழு விலாசத்தையும் அவசியம் குறிப்பிட்டு எழுத வேண்டுகிறோம்.

*விவரங்களுக்கு:*

*தொலைபேசி:*
*71231*

ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் காரியாலயம்
ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் : சென்னை-600 004

புதிய நூல் முதற் பதிப்பு

# அன்னை ஸ்ரீ சாரதாதேவியார் வரலாறு

சுவாமி தபஸ்யானந்தர்

விலை. ரூ. 12 டெம்மி சைஸ் பக்கம் 404 + viii

பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் தெய்விக வாழ்க்கைத் துணைவியாகவும் முதல் சிஷ்யையாகவும் விளங்கியவர் ஸ்ரீ சாரதாதேவியார்.

கடவுளின் எண்ணற்ற தெய்விக குணங்களில் தாய்மை என்பது ஒன்றாகும். கடவுளின் அந்தத் தாய்மை என்ற தத்துவத்தை உலகிற்கு உணர்த்தும் வகையில் அமைந்த வரலாறே ஸ்ரீ சாரதாதேவியின் வரலாறாகும்.

எளிய, ஆனால் அதே சமயத்தில் பொருட்செறிவு மிக்க வாழ்க்கையாக அன்னை ஸ்ரீ சாரதாதேவியின் தெய்விக வாழ்க்கைத் திகழ்கிறது.

சுவாமி தபஸ்யானந்தர் ஆங்கிலத்தில் எழுதிய ஸ்ரீ சாரதாதேவியின் வரலாறு இப்போது தமிழில் வெளியிடப்பட்டுள்ளது.

திருமதி அகிலா நாரயணசாமி அவர்களும், திரு. ஏ. சுப்பிரமணியம் அவர்களும் இந்த நூலை ஆங்கிலத்திலிருந்து தமிழாக்கம் செய்துள்ளனர்.

அனைவரும் படித்துப் பயன்பெற வேண்டும் என்ற நோக்கத்துடன் இந்நூல் மலிவுப்பதிப்பாக வெளிடப்பட்டுள்ளது.

ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்

## SRI RAMAKRISHNA VIJAYAM

(Form IV) (See Rule 8)

Statement about ownership and other particulars about Sri Ramakrishna Vijayam (according to Form IV, Rule 8 circulated by the Registrar of Newspapers of India) :

| | | | |
|---|---|---|---|
| 1. | Place of Publication | : | Madras - 600 004. |
| 2. | Periodicity of its Publication | : | Monthly |
| 3. | Printer's Name | : | K. L. Chellappan |
| | Nationality | | Indian |
| | Address | | Shuddhananda Press, 2 Bhajana Koil Street Sriram Nagar, Adyar, Madras - 600 020. |
| 4. | Publisher's Name | : | Swami Tanmayananda |
| | Nationality | | Indian (Hindu Monk) |
| | Address | | Sri Ramakrishna Math, Mylapore, Madras - 600 004. |
| 5. | Editor's Name | : | Swami Tanmayananda |
| | Nationality | | Indian (Hindu Monk) |
| | Address | | Sri Ramakrishna Math, Mylapore, Madras - 600 004. |
| 6. | Name & address of the individuals who own the newspaper and partners or shareholders holding more than 1% of the capital. | : | Sri Ramakrishna Math, Mylapore, Madras - 600 004. |

I, Swami Tanmayananda, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

Date: 1-3-1982

Sd.
Swami Tanmayananda
*Signature of the Publisher*

# ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

தொகுதி 62 | மார்ச்—1982 | இதழ் 3


## பொருளடக்கம்

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை.
—திருமூலர்

| தொகுதி 62 | துர்மதி ஆடு பங்குனி மீ | இதழ் 3 |
|---|---|---|






नमो देव्यै महादेव्यै शिवायै सततं नमः ।
नमः प्रकृत्यै भद्रायै नियताः प्रणताः स्म ताम् ॥

நமோ தேவ்யை மஹாதேவ்யை சிவாயை ஸததம் நம:|
நம: ப்ரக்ருத்யை பத்ராயை நியதா: ப்ரணதா: ஸ்ம தாம் ||

மகாதேவிக்கு நமஸ்காரம். சிவையான பார்வதிதேவிக்கு எப்பொழுதும் நமஸ்காரம். பிருகிருதியாய் நல்லது பண்ணுகிறவளுக்கு நமஸ்காரம். நாங்கள் தாழ்மையுடன் எப்போதும் அவளை வணங்குகிறோம்.

கல்லா மனத்துக் கடைப்பட்ட நாயேனை
　　வல்லாளன் தென்னன் பெருந்துறையான் பிச்சேற்றிக்
கல்லைப் பிசைந்து, கனியாக்கித் தன்கருணை
　　வெள்ளத் தழுத்தி வினைகடிந்த வேதியனைத்
தில்லை நகர்புக்குச் சிற்றம்பல மன்னும்
　　ஒல்லை விடையானைப் பாடுதுங்காண், அம்மானாய்.

—திருவாசகம்



# ஸ்ரீராமகிருஷ்ணரின் அருள் வாக்கு

**ஞாயிறு, டிசம்பர் 9, 1883**

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம—விடம்) : நீ ஒரு சிறிது ஆத்மசாதனை செய்தாலே, யாராவது ஒருவர் முன்வந்து, 'நீ இப்படி இப்படிச் செய்' என்று உனக்குச் சரியான மார்க்கத்தைக் காட்டி உதவி செய்வார். நீ ஏகாதசி நாட்களில் விரதம் இரு.

நீ எனக்குச் சொந்தமான ஆள், என் உறவினன். அப்படி இல்லாவிட்டால், நீ இந்த அளவுக்கு இங்கே அடிக்கடி வருவது எப்படிச் சாத்தியமாகும்?

கீர்த்தனத்தை நான் கேட்டுக்கொண்டிருந்தபோது, பிருந்தாவனத்தில் ஸ்ரீகிருஷ்ணனின் தோழர்கள் மத்தியில் ராக்காலும் ஒருவனுகு இருந்ததை ஒரு ஞானக் காட்சியில் பார்த்தேன். நரேந்திரன் இருக்கிருனே, அவனது உண்மையான இருப்பிடம் மிக மிக உயர்ந்த ஓர் ஆன்மிக பூமியாகும். ஹிரானந்தனும் அப்படிப்பட்டவன்தான். அவன் ஒரு குழந்தையின் மனநிலையில் அல்லவா இருக்கிருன்! அவன் பழகுவதெல்லாம் எவ்வளவு இனிமையாக இருக்கிறது! அவனையும் நான் பார்க்க விரும்புகிறேன்.

ஒரு சமயம் கௌராங்கர் தமது சீடர்களுடன் கூட்டமாக வருவதைப் பார்த்தேன். அவ்விதம் பார்த்தபோது என் மனம் அக உணர்வில் ஆழ்ந்திருக்கவில்லை. இந்தப் புறக் கண்களைக் கொண்டே கௌராங்கர் தமது சீடர்களுடன் கூட்டமாக வருவதைப் பார்த்தேன். ஊனக் கண்களைக் கொண்டே இது போன்ற எல்லா விதமான ஆன்மிகக் பெல்லாம் என் மனம் உன்னத நிலையில் இருந்தது. ஆனுல் இப்போதோ அப்படிப்பட்ட ஞானக் காட்சிகளைத் தெய்விகப் பரவசத்தில், சமாதியில் இருக்கும்போது மட்டும் தான் பார்க்கிறேன்.

கௌராங்கரும் அவரது சீடர்களும் அடங்கிய கூட்டத்தை இந்தப் புறக் கண்களைக் கொண்டுதான் பார்த்தேன். அவர்களில் ஒருவனுக உன்னையும் அப்போது பார்த்தேன். அந்தக் கூட்டத்தில் பலராமையும் பார்த்தேன் என்று நினைக்கிறேன்.

சில பேர்களைப் பார்க்கும்போது மட்டும் நான் திடீரென்று குதித்தெழுந்து நிற்கிறேன். அதற்கு என்ன காரணம் தெரியுமா? ஒருவன் நீண்ட காலத்திற்குப் பிறகு தனக்கு மிகவும் சொந்தமான ஒருவனைப் பார்க்கும்போது இப்படித்தான் ஏற்படுகிறது.

நான் ஜகன்மாதாவிடம் அழுதுகொண்டே, ''அம்மா, பக்தர்களைக் காண வேண்டும் என்று என் உயிர் துடியாகத் துடிக்கிறது. அவர்களை விரைவில் இங்கு அழைத்து வந்துவிடு'' என்று முறையிட்டுப் பிரார்த்தித்துக் கொள்வேன். அந்த நாட்களில் என் உள்ளத்தில் என்ன என்ன எண்ணங்கள் உதித்தனவோ அவையெல்லாம் எழுத்துக்கு எழுத்து அப்படியே நடந்தேறின.

ஜபமும் தியானமும் பழகுவதற்காகப் பஞ்சவடியில் ஒரு துளசித் தோட்டம் அமைத்தேன். அந்தத் துளசித் தோட்டத்தைச் சுற்றி மூங்கிற்கழியால் வேலி போட வேண்டும் என்று பெரிதும் விரும்பினேன்.

மூங்கிற்கழிகளைச் சேர்த்துக் கட்டிய ஒரு கற்றையும் சிறிது கயிறும் கங்கையாற்றின் வெள்ளத்தினுல் அடித்துக் கொண்டுவரப் பட்டுச் சரியாகப் பஞ்சவடியின் நேர் எதிரில் ஒதுக்கப்பட்டு இருந்ததைப் பார்த்தேன்! அவற்றை அங்கே பார்த்துவிட்டு, கோவிலைச் சேர்ந்த ஓர் ஊழியன் மிகவும் மகிழ்ச்சியோடு ஆடிக்கொண்டும் குதித்துக்கொண்டும் என்னிடம் வந்து இந்தத் தகவலைத் தெரிவித்தான்.

எனக்கு அந்த மகோன்னதமான தெய்விகப் பரவச நிலை வாய்த்தபோது என்னுல் பூஜை முதலியவற்றை விதிமுறைகளுக்கு இணங்கச் செய்ய முடியாது போயிற்று. நான் ஜகன்மாதாவிடம், ''அம்மா, என்னை யார் கவனித்துக் கொள்வார்கள்? அம்மா, என்னை நானே கவனித்துக்கொள்வதற்கு உரிய சக்தி என்னிடம் இல்லையே! அம்மா, நான் உன்னைப்பற்றிப் பேசுவதைக் கேட்கவே விரும்புகிறேன். உன் பக்தர்களுக்கு உணவிட விரும்புகிறேன். என் முன்னுல் யாராவது எதிர்ப்பட்டால் அவருக்கு ஏதாவது ஒருசிறிது கொடுத்து உதவ விரும்புகிறேன். அம்மா, இதையெல்லாம் நான் எப்படி நிறைவேற்ற முடியும்? அம்மா, ஒரு பெரிய மனிதரை நீ என்னிடம் அனுப்பிவை!'' என்று முறையிட்டுப் பிரார்த்தித்தேன். ஆகவேதான் மதுரபாபு முன்வந்து எனக்கு இவ்வளவு தொண்டு செய்தார்.

மேலும் நான் அம்பிகையிடம், ''அம்மா, எனக்கு நிச்சயமாகக் குழந்தை எதுவும் பிறக்காது. ஆனுல் பகவானிடம் உண்மையான பிரேமைபக்தி கொண்ட ஒரு பையன் என்னுடன் எப்போதும் தங்கியிருக்க வேண்டும் என்று நான் ஆசைப்படுகிறேன். அம்மா, அத்தகைய ஒரு பையனை நீ எனக்குத் தந்தருள்'' என்றும் பிரார்த்தனை செய்தேன். அந்தப் பிரார்த்தனை காரணமாகத்தான் ராக்கால் இங்கே வந்து சேர்ந்தான். யாரெல்லாம் எனக்குச் சொந்தமானவர் என்று நான் நினைக்கிறேனே அவர்கள் எல்லாரும் என்னுடைய ஓர் அம்சம் ஆவார்கள், ஒரு கலை ஆவார்கள்.

மீண்டும் குருதேவர், ம—வுடன் பஞ்சவடியை நோக்கிச் சென்றுர். வேறு யாரும் அப்போது அவர்களுடன் இல்லை. ஸ்ரீராமகிருஷ்ணர் தமது வாழ்க்கையின் கடந்தகால நிகழ்ச்சிகள் பலவற்றைப் புன்முறுவலுடன் ம—விற்குத் தொடர்ச்சியாக எடுத்துக் கூறினர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (ம—விடம்): இதோ பார். ஒரு நாள் நான் காளி கோயிலிலிருந்து பஞ்சவடி வரையிலும் உள்ள இடைவெளி முழுவதையும் வியாபித்துக்கொண்டிருந்த ஓர் அற்புதமான உருவத்தைப் பார்த்தேன்! இதை நீ நம்புகிறுயா?

ம— வியப்புக் காரணமாகப் பேச்சற்று மௌனமாக இருந்தார்.

அவர் பஞ்சவடியில் இருந்த ஒரு மரக் கிளையிலிருந்து இரண்டோர் இலைகளைப் பறித்துத் தமது சட்டைப்பையில் வைத்துக் கொண்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: அதோ, மரத்தின் அந்தக் கிளை இப்போது ஒடிந்து போயிருக்கிறது. அதனடியில் அமர்ந்துகொண்டுதான் நான் ஞானசாதனை புரிந்தேன்.

ம—: நான் அதிலிருந்து ஒரு சிறிய கிளையை ஒடித்து எடுத்துச்சென்றிருக்கிறேன். அதை என் வீட்டில் வைத்துள்ளேன்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (புன்சிரிப்புடன்): அவ்விதம் செய்தற்கு என்ன காரணம்?

ம—: அதைப் பார்க்கும்போதெல்லாம் நான் மகிழ்ச்சி அடைகிறேன். இதெல்லாம் நடந்து முடிந்தபிறகு, இந்த இடம் ஒரு மகா புண்ணிய ஸ்தலமாக மக்களால் கருதப்படும்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (புன்சிரிப்புத் தவழ): எந்த மாதிரியான புண்ணிய ஸ்தலம்? பானிஹாடி மாதிரியா?

பானிஹாடி க்ஷேத்திரத்தில் ராகவ பண்டிதர் என்பவர் ஒவ்வோர் ஆண்டும் மகோற்சவம் நடத்தி வந்தார். குருதேவரும் கடந்த சில ஆண்டுகளாக அந்த விழாவைக் காணத் தவருமல் சென்று வந்தார். அங்கே சங்கீர்த்தனம் நடைபெறும்போது குருதேவர் பிரேமானந்தம் பெருக நிருத்தியம் செய்வார். ஸ்ரீ கௌராங்க பக்தர்களின் அழைப்புக்கு அவரால் செவி சாய்க்காமல் இருக்க முடியாது. சங்கீர்த்தனத்தின்போது பக்தர்களுக்கு அவர் பிரேம மூர்த்தியாகவே தோன்றினர்.

மாலைநேரம் ஆயிற்று. குருதேவர் தமது அறையில் இருந்த சிறிய கட்டிலின் மீது அமர்ந்து ஜகன்மாதாவைக் குறித்த தியானத்தில் ஆழ்ந்திருந்தார். உரிய காலத்தில் கோவிலில் மாலை வழிபாடு, சங்கு சேகண்டி ஓசையுடன் ஆரம்பமாயிற்று. ஆலயமணி முழங்கியது. ம— இன்றிரவு தட்சிணேசுவரத்தில் குருதேவருடன் தங்குவதாக இருந்தார்.

# பக்திக்கு ஒன்பது வழிகள்

**வி. தியாகராஜன்**

இறைவனை அடைந்து அவனருள் பெற நம் முன்னோர் நமக்குக் காட்டிய வழிகள் பல. முதல் வழி, இறைவனைப் பற்றிய திருக்கதைகளைக் கேட்டல். ''இறைவனே! உலகத்தை எல்லாம் உன் திருவயிற்றில் அடக்கி வைத்துக் காத்தருளுகிறாய். நீ பெரியவனே. ஆனால், உன்னைப் பற்றிய பெருமைகளை, உனது அனந்த கல்யாண குணங்களைக் கேட்டால், நீ என் செவி வழியே என்னுள் புகுந்துவிடுகிறாய். உலகத்தை உன்னுள்ளே வைத்துள்ள உன்னையே என் நெஞ்சுள் நிறைத்துக்கொள்ளும் பேறு பெற்ற நான் பெரியவனா? நீ பெரியவனா?'' என்று கேட்கிறார் நம்மாழ்வார்.

புவியும் இருவிசும்பும் நின்னகத்த; நீஎன்
செவியின் வழிபுகுந்து என்னுள்ளாய்—
அவிவின்றி
யான்பெரியன் நீ பெரியை என்பதனை
யாரறிவார்?
ஊன்பருகு நேமியாய்! உள்ளு.

இறைவனது பெருமையை ஏழே நாட்களில் சுகப்பிரம்ம முனிவரிடம் கேட்டுப் பரீக்ஷித் மகாராஜன் நற்கதி பெற்றான் என்பது வரலாறு.

ஆண்டவன் நமக்கு அளித்துள்ள உறுப்புக்களில் மிகச் சிறந்தது செவி. உறுத்துப் பார்த்தால் கண் வலிக்கும். அதிகம் பேசினால் வாய் வலிக்கும். கோயிலுக்கு நடந்தோ ஓடியோ சென்றால் கால் வலிக்கும். மூக்கு இறைவனை வணங்க என்ன செய்கிறது என எண்ணலாம். உள்ளிருந்த காற்றை வெளிவிடவும், வெளிக் காற்றை உள்ளே உறிஞ்சி உடம்பில் உயிர் ஒன்றி நிற்கவும் உதவும் உபகாரியே மூக்கு. சிவ பெருமானுடைய திருப்பெயர்களில் பிஞ்ஞகன் என்பதும் ஒன்று. இந்தப் பெயரைச் சொல்ல மூக்கு அவசியம். மெல்லினத்தை உச்சரிக்க மூக்கு அவசியமன்றோ,

புல்லங் கணநீர்ப் புழையென்கோ
புற்றென்கோ
சொல்லும் பசுமட் டுளையென்கோ—
சொல்லுஞ்சீர்
வீயாத பிஞ்ஞகப்பேர் மெல்லினத்தின்
நல்லிசைதான்
தோயாத நாசித் துளை. —அருட்பா.

ஆனால் எத்தனை வேலை செய்தாலும் வலி என்பதே இல்லாத உறுப்பு நம் காது. காது இறைவனின் நாமத்தைக் கேட்டு மனதில் பதிய வைக்கும் பேருபகாரி.

வரகுணபாண்டியன் எல்லாப் பேச்சுக்களிலும் இறைவனது நாமத்தையே கேட்டான். நரி 'ஓ' என ஊளையிடுவது பாண்டியனுக்கு, 'சம்போ' எனக் கேட்டதாம். நரிகள் சிவநாமம் கூறியதனால் குளிர் அவற்றைத் தாக்காதிருக்க நிறையப் போர்வைகளை அவற்றுக்குப் போர்த்தினான். தண்ணீரில் தவளைகள், 'கர, கர' எனக் கத்த, பாண்டியன் காதில் 'ஹர ஹர' எனக் கேட்க, சிவநாமம் கூறிய தவளைகள் இருந்த இடத்தில் காசும் பொன்னும் தூவி மகிழ்ந்தான் என்பது வரலாறு. எனவே ச்ரவணம் என்ற கேட்கும்பேற்றை முதற்படியாக்கினர் பெரியோர்.

இறைவனைப் பாடியே அடைந்த பெரியோர் நாரதர், திருப்பாணாழ்வார் முதலானவர். 'பாடும் பணியே பணியாய் அருள்வாய்' என வரம் வேண்டினார் அருணகிரிநாதர். அப்பர், சுந்தரர், சம்பந்தர், மாணிக்கவாசகர் முதலானோர் பாடிப் பரவியே ஆண்டவனை அடைந்தனர் என்பது வெளிப்படை. கீர்த்தனம் என்ற இந்த வழி இரண்டாவதாம்.

குருவினிடம் இறைவனின் பெருமையைக் கேட்டறிதல் முதலாவதாகவும், கேட்டு அறிந்து மகிழ்ந்ததை எண்ணிப் பாடி மகிழ்வதை இரண்டாவதாகவும் ஆக்கினர் போலும்!

கேட்கவும் பாடவும் ஆதாரம் மனம். மனம் நினைத்தால்தானே ஏனைய உறுப்புக்கள் இயங்கும்? அதனாலேயே பெரியோர் இறைவனிடம், 'கருதா மறவா நெறி காண எனக்கு இருதாள் வனசம் தர என்றிசைவாய்' என்றும் (அருணகிரிநாதர்), 'உனை என்றும் மறவாமை வேண்டும்' என்றும் (இராமலிங்கர்) பாடினர். ''இறைவனே! உன் கருணையால் என் மனத்துள் புகுந்தாய். உன்னால் அடியவர்களின் மனதை விட்டு அகலவே முடியாது. எனவே நானும் உன்னை மறக்கவே முடியாது''

வந்தாய் என்மனத்தே வந்து நீ புகுந்தபின்னை
எந்தாய் போயறியாய்! இதுவே அமையாதோ?
கொந்தார் பைம்பொழில்சூழ் குடந்தைக் கிடந்துகந்த
மைந்தா! உன்னை என்றும் மறவாமை பெற்றேனே

என்பது திருமங்கை மன்னன் வாக்கு. இதையே ஸ்மரணம் என்ற நிலையாக அமைத்தனர்.

இறைவனுக்கு நாள்தோறும் பூசை புரிவதைப் பாதசேவனம் என அழைத்தனர். 'எனக்கு அதுதான் பொழுதுபோக்கு' என்றார் பரம பக்தமணி.

தரித்திருந்தே னாகவே தாரா கணப்போர்
விரித்துரைத்த வெந்நாகத்தானை—தெரித்தெழுதி
வாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும்
பூசித்தும் போக்கினேன் போது

என்கிறார் திருமழிசைப்பிரான். பாதத்தை வணங்கிப் பாடி மகிழ்ந்தனர். 'பெற்ற தாயின் மார்பு பிறந்த குழந்தைக்கு எவ்வாறோ அவ்வாறே பக்தனுக்குப் பகவானின் திருவடி' என்பது ஆன்றோர் வாக்காம். ''தூக்கிய உனது திருவடியான குஞ்சித பாதத்தை வணங்கி நற்கதி பெறுவதற்காகச் சிதம்பரத்திற்கு வந்துள்ளேன். உற்ற நின் திருக்கூத்து ஒருகால் நோக்கிப் பரகதியடைவான் திருமுன்பு எய்தப் பெற்றனனாக'' என்றார் குமரகுருபரர். தூக்கிய திருவடியான ஒரு காலைக் காண வேண்டும் என்றும், 'ஒருகால் நோக்கி' என்பதனால் ஒரே தடவை தரிசித்தாலும் பரகதி கிடைத்துவிடும் என்றும் நயமறிந்து இன்புறலாம். பாதத்தின் பெருமை—பாதசேவனத்தின் பெருமை இத்தகையது.



மலரிட்டு அருச்சித்து இறைவனது அருளைப் பெற்றவர் கோதை நாச்சியார் என அழைக்கப்பெற்ற ஆண்டாள். அம்மையார் இறைவனுக்குப் பூமாலை மட்டும் அல்ல, பாமாலையும் சூட்டினார் என்பது உலகமறிந்த ஒன்று. முருக நாயனார் தம் வாழ்நாள் முழுவதும் இறைவனுக்குப் பூமாலை கட்டி அதனால் நற்பேறு பெற்றார்.

வண்டுகள் விழித்து மலரையடையுமுன்பு எழுந்து, மரமேறினால் வழுக்காதிருப்பதற்குத் தமது கால்களில் புலிநகம் வேண்டும் என்றும், அந்த இருள்நேரத்தில் மலர்களைக் காண்பதற்கு நகங்களில் கண் வேண்டும் என்றும் விரும்பி அவ்வாறே பெற்று இறைவனுக்கு மலர் பறித்துப் பூசித்து நற்பேறு பெற்றார் வியாக்ரபாதர்.

சிறையளி புகுதா முன்னம் சிறுகாலை எழுந்திருந்து
பொறைமரம் வழுக்காது ஏறப் புலிநகம் பெற்றும் அந்த
நறைமலர் பழுது பார்க்க நகந்தொறும் கண் படைத்தும்
குறைவறப் புரிந்தான் பூசை குயவரி பதத்தினானே

எனக் கூறுகிறது புட்பவிதி. சிதம்பரம் கோயிற் புராணமும் இவ்வாறே கூறும். இந்த வழியை அர்ச்சனம் எனக் குறித்தனர்.

இறைவனை வணங்குவது தவிர வேறு ஒன்றுமே, ஏன், சுவர்க்கம்கூட வேண்டாம் எனப் பெரியோர் கூறினர்.

கூடும் அன்பினில் கும்பிடலே அன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார்

என்பது சேக்கிழார் வாக்கு.

'இறைவனை மனதார நினைத்து, கண்ணீரக் கண்டு உருகித் தொழுபவர்களைத் தொழுதால்கூட யமபயம் வராது, பாவங்கள் விலகும்' என்பார் நம்மாழ்வார்.

உண்ணாது வெங்கூற்று; ஓவாத
பாவங்கள் சேரா; மேலை
விண்ணோரும் மண்ணோரும் வந்திறைஞ்சும்
மென்தளிர் போலடியினானை,
பண்ணார வண்டியம்பும் பைம்பொழில்சூழ்
தண்சேறை யம்மான் தன்னைக்
கண்ணாரக் கண்டுருகிக் கையாரத்
தொழுவாரைக் கருதுங்காலே

என்பது அவர் வாக்கு. இறைவனைத் தொழுது வணங்குபவர்களே தொழத்தக்கவராகிவிடுகிறார் என்றால் இறைவனை வந்தனம் செய்வது என்பது எவ்வளவு பெரிய காரியமாகிவிடுகிறது!

என்றும் இறைவனுக்கு அடிமையாக இருப்பது பக்தர்களுக்கு இன்பம்.



எந்தை தந்தை தந்தை தந்தைதம்
மூத்தப்பன் ஏழ்படி கால் தொடங்கி
வந்து வழி வழி யாட்செய் கின்றோம்

என்கிறார் பெரியாழ்வார். அவரது வளர்ப்பு மகளான ஆண்டாள்,

எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும்
உன்னோடு
உற்றோமே யாவோம், உனக்கே நாம்
ஆட்செய்வோம்

எனத் தீவிரமாகப் பேசுகிறாள்.

சிவனடியார், 'கைத்திருத் தொண்டு செய் கடப்பாட்டினார்' என்று, தொண்டு செய்வதே வழக்கமாக உள்ளவர் என்கிறார். பெரும் பேறு பெற்ற பக்தர்களை இறைவன் வலிய வந்து ஆட்கொள்ளுகிறான் என்பதைச் சுந்தரமூர்த்தி நாயனார் புராணத்தில் காணலாம். இத்தகைய பக்தி நெறியை, தாஸ்யம் (அடிமை செய்தல்) என்பர்.

வலிய வந்து ஆட்கொண்ட இறைவனுக்குச் சுந்தரமூர்த்தி நாயனார் அடிமையாக மட்டுமில்லை. இறைவன், "என்னை உனக்கு நண்பனாகவும் தந்தேன்" என்றார் என்பது வரலாறு.

இப்படிப்பட்ட பக்திநிலையையே ஸக்யம் என்றனர். கண்ணனோடு ஒரே பள்ளியில் குசேலர் படித்தமையால் தோழமை கொண்டார். எனவே இவரும் ஸக்ய பக்தி செய்த பேறு பெற்றவரானார்.

தன்னையே இறைவனுக்கு அர்ப்பணம் செய்தல் ஆத்ம நிவேதனம் என்ற கடைசிப் படியான பக்தியாகும். 'நெஞ்சே உரையே செயலே எல்லாம் உனதென்றாய்' என, 'என் மனம் வாக்குக் காயம் யாவும் உனதன்றோ' என்றார் மாணிக்கவாசகர். "எல்லாமே உன் செயல். எனக்கு என்ன வேண்டும் என்பதை, என்னை நீ அடிமையாக ஏற்றுக் கொண்டபின் நான் ஏன் நினைக்க வேண்டும்? உன் விருப்பமே என் விருப்பம். நீயும் நானும் ஒன்றாகிவிட்டோமன்றோ?"

வேண்டத் தக்க தறிவோய் நீ; வேண்ட
முழுதும் தருவோய் நீ;
வேண்டும் அயன் மாற்கு அரியோய் நீ;
வேண்டி என்னைப் பணிகொண்டாய்,
வேண்டி நீ யாது அருள் செய்தாய்
யானும் அதுவே வேண்டினல்லால்,
வேண்டும் பரிசு ஒன்றுண்டென்னில்,
அதுவும் உன்றன் விருப்பன்றே

என்கிறார் திருவாசகர். அதனாலேயே பஞ்சாக்ஷரப் படிகடந்து நடராஜாவிடம் கலந்துவிட்டார்.

இந்த ஒன்பது வழிகளையும் பின்பற்றிப் பரிபூரண பாக்கியம் பெற்றவர் பக்த சுதாமா என்ற குசேலர். கண்ணனுடைய கதைகளை அடிக்கடி கேட்டார் (ச்ரவணம்). அவன் நாமத்தைத் தினமும் பாடினார் (கீர்த்தனம்). மறவாது அவனை நினைத்து உருகி வாழ்ந்தார் (ஸ்மரணம்). நித்ய பூஜையைச் செய்தார் (பாத சேவனம்). மலரிட்டு வழிபட்டார் (அர்ச்சனம்.) வணங்கினார் (வந்தனம்). பூஜை முதலிய

வற்றைச் செய்ததனுல் அடிமையானுர் (தாஸ்யம்). கண்ணனுடன் படித்ததனுல் நண்பரானுர் (ஸக்யம்). கடைசியாக அனுஷ்டானத்தில் தம்மை இடித்து, தவத்தினுல் வறுத்துத் தாமே அவல் மாதிரி மாறித் தம்மையே இறைவனுக்கு ஆத்ம நிவேதனம் செய்துவிட்டார். கண்ணன் அவரை ஏற்றுக் கொண்டதனுல் குசேலருடைய வீடும் கண்ணனுடையதாயிற்று. கண்ணன் அருளால் அந்த வீடு செல்வம் நிரம்பியது.

ஆத்ம நிவேதனம் செய்து தம்மையே அர்ப்பணம் செய்துகொண்டதனுல்தான் கண்ணனிடம் அவர் எதையும் யாசிக்கவில்லே. மேலும்,

கண்ணு! நான்முகனைப் படைத்தவனே!
காரணு! கரியாய்! அடியேன் நான்
உண்ணு நாள் பசியாவதொன்றில்லே!
ஓவாதே நமோ நாரணுவென்று
எண்ணு நாளும் இருக்கு எசுச் சாமவேத
நாண்மலர் கொண்டு உனபாதம்
நண்ணு நாள் அவை தத்துறுமாகில்
அன்று எனக்கு அவை பட்டினிநாளே

என்ற பெரியாழ்வாரின் வாக்கின்படி, 'இறைவனைப் பேசாத நாளே பட்டினி நாள்' என்பதனுல் அவர் எந்த நேரமும் அவன் புகழ் பாடி வாழ்ந்ததனுல் வறுமையின் கொடுமை அவரைத் தீண்டவில்லே. மேலும், நம்மாழ்வார் கூறியது போல், 'உண்ணும் சோறு பருகும் நீர் தின்னும் வெற்றிலேயுமெல்லாம் கண்ணன் எம்பெருமான்' என்று எல்லாவற்றையுமே கண்ணன் மயமாகக் கண்ட அவர் எதையுமே கண்ணனிடம் வேண்டாமல் அவனைப் பிரியாமல் அடைந்தார்.

இப்படி இறைவனே அடைய ஒன்பது வழிகள் உள்ளன என்பதை ஸ்ரீமத் பாகவதத்தில், 'பக்தர்கள் பகவானைப் பெறும் வழிகள் இவை' எனப் பிரகலாதன் காட்டுகிருன்.

சுலபமான இத்தகைய வழிகளில் இறைவனை அடைய வழிகாட்டிய மகாத்மாக்களின் திருவடிகளே வணங்கி அவ்வாறே நாமும் நடக்கக் கண்ணனே வேண்டுவோமாக!

ஸ்ரீராமனுக்கு வனவாசத்தில் ஏற்பட்ட கஷ்டங்களும் ஆபத்துக்களும் பெரியவை. ஊருக்குப் போகும் குழந்தைக்குத் தாய் கட்டுச்சாதம் கொடுப்பது போல், ராமன் வனவாசம் சென்றபோது கௌசல்யையும் செய்தாள். 'பதினுன்கு வருஷம் கெடாமலிருக்கும் பட்சணம் எது? குழந்தைக்கு எதைத் தரலாம்?' என்று நிரம்ப ஆலோசித்தாள் கௌசல்யை. பிறகு நிரந்தர பட்சணமான தர்மத்தைத்தான் கட்டிக் கொடுத்தாள்.

—காஞ்சிப் பெரியவர்

பலவீனம் உள்ளவனுகவும் தீயவனுகவும் இருப்பது தனது இயற்கைத் தன்மை என்று மனிதன் நினைத்துக்கொள்வது பெரும் தவருகும். ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் வலிமை மிக்க தெய்வசக்தி குடிகொண்டிருக்கிறது. அவனுடைய பழக்க வழக்கங்களும் ஆசைகளும் எண்ணங்களும்தாம் நலிவுற்றும் தீமை நிறைந்தும் இருக்கின்றன. ஆனுல் அவனது ஆத்மா பரிசுத்தமாகவே இருக்கிறது.

—ரமண மகரிஷி

ஜீவன்முக்தர்கள் மூவகைப்படுவர். அகண்டாகார ஞானம் பழகும் காலத்தில் சாதகன் என்றும், பழகிய பிறகு திடப் பிரக்ஞன் என்றும், அதற்கப்பால் விதேகமுக்தி நிலேயை அடைந்தவனே ஆரூடன் என்றும் கூறுவர்.

—ஞானனந்தர்

# சுவாமி பிரேமானந்தரின் போதனைகள்

உங்களில் பலர் இப்போது ரிஷிகேசத்தில் கூடியிருக்கிறீர்கள். வீண்பேச்சில் காலத்தைப் போக்காமல் ஜாக்கிரதையாக இருங்கள். உங்கள் குறிக்கோளை மறக்காமலிருப்பது முக்கியம்.

நீங்கள் எல்லோரும் விவேகம் நிறைந்தவர்களாய் ஸ்ரீராமகிருஷ்ணரையும் விசாலமான இதயம் படைத்த விவேகானந்தரையும் பின்பற்றுவதற்குத் தகுதியுள்ளவர்களாய் விளங்க வேண்டும் என்று பிரார்த்திக்கிறேன்.

துறவிகளின் லட்சியமாக விளங்கும்படி உங்கள் வாழ்க்கையைச் சீர்படுத்திக் கொள்ளுங்கள்.

பணக்காரர்களைப் போல் யாத்திரை போவதற்கும், உபந்நியாசங்கள் செய்து உங்கள் திறமையை விளம்பரம் செய்வதற்கும் நீங்கள் பிறக்கவில்லை. கடுமையான தவம் செய்து, அகங்காரத்தை ஒழித்து, ஆண்டவனை அடைந்து, பிறகு திரும்புங்கள்.

இதை எல்லாம் சாதித்தால், இந்தியா மட்டுமன்று, உலகம் முழுவதும் உங்களைக் கண்டு ஆச்சரியமடைந்து உங்களை உண்மையான வழிகாட்டிகளாக ஏற்றுக்கொள்ளும். அப்பொழுதுதான் நீங்கள் பேலூர் மடத்தைச் சார்ந்த சன்னியாசிகளும் பக்தர்களுமாவீர்கள். வயிறு வளர்ப்பதற்காகத் துறவாடை பூண்டவர்கள் இந்தியாவில் ஏராளமாக இருக்கிறார்கள்.

தூய்மையாகவும் நேர்மையாகவும் இருங்கள். 'ஆண்டவனே! எனக்கு இரங்கி அருள்புரிவாய், அருள்புரிவாய்' என்று முழு மனதுடன் பிரார்த்தனை செய்யுங்கள்.

அளவுகடந்த அன்பு சுரக்கும் ஆண்டவன் உங்களுக்கு வலிமையும் பக்தியும் தைரியமும் அளிப்பார். இதயத்தின் அடியிலிருந்து பிரார்த்தித்தால் அவர் செவிசாய்த்து அருள் புரிவார்.

கர்வப்படாமலிருங்கள். நாம் பாடம் கற்கப் பிறந்தோம். கற்க வேண்டியதற்கு எல்லையோ முடிவோ கிடையாது. ஆண்டவன் நல்ல மனதையும் தூய அறிவையும் அருள வேண்டும் என்று பிரார்த்திப்போம். 'எல்லோரும் பகவானுடைய திருநாமத்தை ஜபிக்கக்கற்றுக்கொண்டு விழிப்படையட்டும். எல்லோரும் புதுப் பிறப்பு அடைந்தவர்களாகட்டும். எல்லோருடைய மதிமயக்கமும் நீங்கட்டும். எல்லோரும் பரமானந்தத்தை அடையட்டும்' என்பது என்னுடைய பிரார்த்தனை.

'சேவையும் பூஜையும் கீழ்ப்படிதலும் ஒருவனை ஸ்ரீராமனிடம் சேர்க்கும்.' சேவை சாமானியமானதா? 'என்னிடம் பக்தி செய்பவன் பலரால் போற்றப்பட்டுச் சேவிக்கப்படுவான். அவனுக்கு எவனும் ஈடாகமாட்டான். அவன் மூவுலகங்களையும் வெல்லுவான்' என்று ஸ்ரீராமகிருஷ்ணர் கூறுவார்.

நீங்கள் எதற்கு அஞ்ச வேண்டும்? ஸ்ரீராமகிருஷ்ணரிடம் சரண்புகுந்த நீங்களும் மூவுலகத்தையும் வெல்லுவீர்கள். உங்கள் முழு மனதையும் ஸ்ரீராமகிருஷ்ணருக்கும் அவருடைய அடியார்களுக்கும் சேவை புரிவதில் செலுத்துங்கள். வாழ்க்கைப் பயனை அடைந்து மகிழுங்கள். அச்சமும் கவலையும் எட்டி நிற்கட்டும். உங்களைப் பார்த்து ஜனங்கள், நீங்கள் பூமியில் நடமாடும் தெய்வங்கள் என்று புகழட்டும். அடக்கமும் கீழ்ப்படிதலும் மட்டும் இருந்தால் போதாது. உங்கள் உடல் பொருள் ஆவி எல்லாம் ஸ்ரீராமனுக்கு அர்ப்பணம் செய்து, உள்ளேயும் வெளியேயும் வாழ்க்கையில் ஸ்ரீராமன் ஒருவனையே அறிந்திருந்த ஹனுமாரைப் போல் இருங்கள். உங்கள் பாரங்களையும் கடமைகளையும் ஸ்ரீராமகிருஷ்ணர் தாமே ஏற்றுக்கொண்டிருக்கிறார். நீங்களும் உங்கள் கடமைகளை அவரிடம் ஒப்படைத்திருக்கிறீர்கள். ஆகையால் அஞ்ச வேண்டாம்.

குதித்தும், 'ஹா, ஹோ' என்று கூத்தாடியும், சாஸ்திரங்களை ஒப்பித்தும் ஒருவன் பகவத் பக்தனாகிவிட முடியுமா? அடக்கமாகவும் அகங்காரமற்றவனாகவும்

இருப்பது முக்கியம். இந்தக் காலத்திற்கு வேண்டுபவர், பயன் கருதாமல் பணி புரியக் கூடியவர்கள்; பகவத்பக்தியில் ஆழ்ந்தவர்கள். பேச்சன்று, செயல்; இதை வாழ்க்கையில் மெய்ப்படுத்துங்கள். பேசாமல் வேலை செய்பவர்கள் நமக்கு வேண்டும். பேசாமல் வாழ்ந்து காட்டுவதனுல் பிறருடைய வாழ்க்கையை மாற்றக்கூடிய பிரசாரகர்கள்தாம் நமக்குத் தேவை.

மகாமாயையின் மோகவலையிலிருந்து விடுவித்துக் கொள்வது மிகவும் கடினம். கண்ணீர் விட்டுப் பிரார்த்தனை செய்: ''தயை மிக்க தாயே! எனக்கு அருள்புரி. உன் திவ்விய தரிசனத்தைக் கொடு. எனக்கு வழியைக் காட்டு. நான் தவமில்லாதவன். பக்தி இல்லாதவன். நான் உன் பலவீனமான குழந்தை. என்னைக் காப்பாற்று. கை விடாதே.''



கடவுள் எல்லோருக்கும் கடவுள். அவரது அருள் மனிதவர்க்கம் முழுவதற்கும் உரியது. போலி பக்தர்கள் பகை, பொறாமை, ஹிம்சை, கட்சிச் சண்டை ஆகியவற்றைக் கடக்கத் தெரியாதவர்களாக இந்த உண்மையை மறந்துவிடுகிறார்கள். தடைகளையெல்லாம் நீக்கவே ஆண்டவன் அவதரிக்கிருர். மறுபடியும் அவருடைய அடியார்கள் வேலிகளைப் போட்டு, ஏதோ புதிய அதிசயமான கருத்துக்களைப் பிரசாரம் செய்வதாகச் சொல்லிக்கொண்டு, இம்மாதிரி விசாலமான உணர்ச்சி இதற்கு முன்பு இருந்ததில்லை என்று பறைசாற்றிக் கொண்டு, மற்ற மதக் கோட்பாடுகளையும் வழிபாடுகளையும் தூற்றிக்கொண்டு, அவை மூட நம்பிக்கை என்றும், தவருனவை என்றும், தங்கள் வழியே சாச்வதமானதும், உண்மையானதும், நேரானதும் என்றும் உரிமை கொண்டாடக் கிளம்பிவிடுகிருர்கள்.

ஸ்ரீராமகிருஷ்ணருடைய பரிபூர்ணமான அருள் உங்களிடம் இருப்பதை நான் காண்கிறேன். மனித நடமாட்டம் இல்லாத தனிமையான சூழ்நிலையில் நீங்கள் இருப்பது உங்கள் அதிர்ஷ்டம், பெரிய அதிருஷ்டம். முழுமனதுடன் தியானம் செய்யுங்கள். ஆழ்ந்த பகவத் பக்தியில் பித்தேறியவர்களாய்ப் பரிபூர்ண நிலையை எய்தி ஜீவன் முக்தர்களாகிவிடுங்கள். பிறருடைய அபிப்பிராயங்கள் நல்லவையோ தீயவையோ, அவற்றைப் பொருட்படுத்த வேண்டாம். இந்தப் பிறவியிலேயே, இந்த உடலில் இருக்கும்போதே கடவுளைக் காணவேண்டும். அது ஒன்றுதான் எல்லாவற்றையும்விட மிகவும் முக்கியம். அதன் பிறகு அகங்காரமும் கர்வமும் உங்களை விட்டு நீங்கி நீங்கள் பேசும் பேச்செல்லாம் தெய்விக வாக்காக இருக்கும்.

எவரிடம் சத்தியமும் நேர்மையும் தீங்கு செய்யாமையும் தன்னடக்கமும் விவேகமும் குடி கொண்டிருக்குமோ அவரே பெரியவர்.

—புத்தர்

இறைவன் சத்தியத்திற்கே எடுத்துக்காட்டாக விளங்குபவன். நீ அவனை அனுபூதியில் உணர்கிற வரையில் அவனுடைய திருநாமத்தை ஜபித்துக்கொண்டிரு.

—குரு நானக்

துறவு என்பது வெளிவேஷமல்ல; அது உள்ளத்தில் நிறைவேற வேண்டிய வெற்றியாகும்.

—ராஜாஜி

# பகவான் ரமணர்

நாடோடி




பகவான் ரமணர் தாம் தினம் கடவுளைப் பார்ப்பதாகாகவும் அவரோடு மூன்று மணி நேரம் தங்கியிருப்பதாகவும் சொல்வதுண்டு.

இதைக் கேட்டு மூன்று பாதிரிகள் அவரைப் பார்க்க வந்தார்கள். ''நீங்கள் ஊரை ஏமாற்றப் பார்க்கிறீர்கள் என்று நினைக்கிறோம். பகவானையாவது நீங்கள் பார்ப்பதாவது! அவரோடு மூன்று மணி நேரம் இருப்பதாவது! உங்கள் பகவானை எங்களுக்குக் காட்டுங்கள். இல்லையேல் நீங்கள் ஊரை ஏமாற்றிக்கொண்டிருக்கிறீர்கள் என்று உலகுக்குச் சொல்வோம்'' என்றார்கள்.

இதைக் கேட்ட பகவான் ரமணர் மெல்லச் சிரித்தார். 'நாளைக் காலையில் வாருங்கள். நான் பகவானைக் காண்பிக்கிறேன்' என்று சொன்னார்.

அடுத்த நாள் காலை அந்த மூன்று பாதிரிகளும் வந்ததும், ரமணர், ''என்னோடு வாருங்கள். நான் பகவானைக் காண்பிக்கிறேன்'' என்று சொல்லி அவர்களை அழைத்துச் சென்றார்.

மூன்று மைல் தூரம் நடந்து ஒரு காட்டுக்கு வந்து சேர்ந்தார்கள். அங்கு ஒரு சிறு குடிசை இருந்தது. அந்தக் குடிசைக்குள் ரமணர் நுழைந்தார். ஆனால் அந்தக் குடிசைக்குள்ளிருந்து வந்த நாற்றத்தைப் பார்த்துவிட்டு மூன்று பாதிரிகளும் வெளியிலேயே நின்றார்கள்.

குடிசைக்குள்ளே இருந்த கணவனும் மனைவியுமாகிய இருவரும் குஷ்ட ரோகிகள். அவர்கள் இருவரும் தரையில் படுத்துக் கிடந்தார்கள்.

பகவான் ரமணர் தாம் கொண்டுவந்திருந்த தைலத்தை அவர்களின் உடலில் தடவினார். பிறகு கைகளைச் சுத்தம் செய்துகொண்டு அங்கு வெளியில் மூன்று கற்களைப் பரப்பி ஓர் அடுப்பாகச் செய்தார். அந்த அடுப்பின்மீது ஒரு சட்டியை வைத்துக் கஞ்சி காய்ச்சினார். அந்தக் கஞ்சியை அந்த இரண்டு குஷ்டரோகிகளுக்கும் கொடுத்துக் குடிக்கச் சொன்னார்.

இந்தக் காரியங்களைச் செய்து முடிப்பதற்குக் கிட்டத்தட்ட மூன்று மணிநேரம் ஆயிற்று. இதை அந்தப் பாதிரிகள் பார்த்துக்கொண்டேயிருந்தார்கள்.

கடைசியில் ரமணர் அவர்களைப் பார்த்து, ''இவர்கள் இருவருமே என் பகவான். இவர்களுக்குச் செய்யும் தொண்டை நான் பகவானுக்குச் செய்யும் தொண்டாகக் கருதுகிறேன். இந்தக் காரியத்தில் தினம் எனக்கு மூன்று மணிநேரம் ஆவதனால் நான் தினம் பகவானோடு மூன்று மணிநேரம் இருப்பதாகச் சொன்னேன்'' என்றார்.

இதைக் கேட்டுப் பாதிரிகள் ஆச்சரியமடைந்தனர். பகவான் ரமணரை அவர்கள் சிரம் தாழ்த்தி வணங்கி, ''எங்களை மன்னிக்க வேண்டும். எங்கள் இயேசு உங்களைப் போலவே இருந்தார். உங்களைப் பார்க்கும்போது எங்களுக்கு இயேசுவைப் பார்ப்பது போல இருக்கிறது'' என்று பாராட்டி வந்த வழியே சென்றுவிட்டார்கள்.

# வாயும் கண்டமும்

கி. வா. ஜகந்நாதன்

காரைக்காலம்மையார் இறைவனை விளித்துத் துதிப்பார். அவனுக்கு அறிவுரை சொல்வது போல ஒன்றைச் சொல்வார். அவனிடம் சில வினாக்களை விடுப்பார். இவையெல்லாம் அவருடைய பக்தி உணர்ச்சியால் எழுபவை.

இப்போது இறைவனிடம் ஒரு கேள்வி கேட்கிறார். இறைவனுடைய நஞ்சுண்டு இருண்ட கண்டத்தில் தம் பார்வையைப் பதித்துப் பல வேறு வகையில் அவர் பேசுவதை நாம் பார்த்து வருகிறோம்.

முதலில் இறைவனை விளிக்கிறார்.

அடியவர்கள் இறைவன் மேல் மலர்களைத் தூவி அர்ச்சனை புரிவார்கள். அவர்களுக்கு அவன் அருள் பாலிப்பான். ஆனால் ஒருவன் அவன்மேல் மலர்களை வீசினான். அவனைப் பெருமான் எரித்துவிட்டான். பக்தர்கள் அன்பினால் மலர்தூவி வழிபடுவார்கள். அவனோ மென்மையான மலர்களையே தன் அம்புகளாகக் கொண்டு எய்வான். உலகத்து மக்களிடம் அந்த அம்புகளினால் காம உணர்ச்சி உண்டாகும்படி செய்வான். இறைவனிடமும் அந்த வேலையைச் செய்தான். அதன் பயன் என்ன? காமன் எரிந்து சாம்பலானான். காமாக்கினியால் யாவரையும் தகிக்கும் மன்மதனது ஆற்றல் எம்பெருமானிடம் பலிக்கவில்லை.

பளபளவென்று ஒளி வீசும் கரும்பு வில்லை உடையவன் மன்மதன். அவனைத் திருக்கண்ணோக்கத்தால் எரித்துவிட்டான் எம்பெருமான்.

**ஒளிவிலி வன்மகனை**
**ஒண்பொடியா நோக்கி**

அவன் விட்டவை மென்மலர்கள்தாம். என்றாலும் அவன் அவற்றையே தன்னுடைய படைக்கலமாகக் கொண்ட வன்மையை உடையவன். அவன் சாம்பரானான். இறைவன் திருக்கண்ணால் ஆன சாம்பராதலின் அது பளபளக்கிறது.

இவ்வாறு காமனை எரித்த திருவிழியை உடைய இறைவன் அன்பர்களுக்குத் தண்மையான அருளைப் புரிபவன். அவர்களுடைய சித்தம் காமம் முதலிய மாசுகள் இல்லாமல் தெளிவாக இருக்கும். தெளிவற்ற உள்ளங்களில் அவன் இருந்தாலும் அங்கே அவன் நிலைகொள்வதில்லை. சலனமுள்ள நீரில் நிழல் நன்கு தெரியாமல் இருப்பது போல, இறைவனுடைய வடிவம் அத்தகைய உள்ளங்களில் நிலைகொள்வதில்லை.

ஆனால் ஞானத்தால் தெளிவு பெற்ற உள்ளங்களில் அவன் நிலையாகத் தங்கியிருப்பது போலக் காட்சியளிப்பான்.

**தெளிவுள்ள சிந்தனையிற் சேர்வாய்!**

சிந்தனை என்பது சித்தத்தைக் குறித்தது. மனத்தில் நான்கு பகுதிகள் உண்டு. அவை மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பன. அவற்றை அந்தக்கரணம் என்றும் அகக் கரணம் என்றும் கூறுவர். மனம் ஒன்றை விட்டு மற்றொன்றில் தாவுவது.

> "ஒன்றைவிட் டொன்று பற்றிப்
> பாசக் கடற்குளே வீழாமல் மனதற்ற
> பரிசுத்த நிலையை அருள்வாய்"

என்று வேண்டுவார் தாயுமானவர். அத்தகைய பரிசுத்த நிலையைப் பெற்றவர்கள் அடியார்கள்.

புத்தி என்பது தக்கது இன்னது, தகாதது இன்னது என்று ஆராய்ந்து பார்ப்பது. சித்தம் என்பது ஒன்றைப் பற்றி நிற்பது. அகங்காரம் என்பது நான் என்ற உணர்வு.

இறைவனுடைய திருவடியைப் பற்றிக் கொண்டு, சலனமின்றி உள்ள சித்தம் படைத்தவர்கள் அன்பர்கள்.

> "அளப்பரும் கரணங்கள் நான்கும்
> சிந்தையே ஆக"

என்று இந்த நிலையைச் சேக்கிழார் சொல்வார்.

அவ்வாறு சித்தத்தைச் சிவன்பாலே வைத்த அன்பர்களின் உள்ளம் தெளிவாக இருக்கும். அந்தத் தெளிவை உடைய சித்தத்திலே இறைவன் தங்கித் தன் வடிவத்தைத் தெளிவாகத் தரிசிக்கும்படி அருள்புரிவான்.

**தெளிவு உள்ள சிந்தனையிற் சேர்வாய்!**

இவ்வாறு இறைவனை விளித்த அம்மையார் அவனிடம் ஒரு வினாவைச் சமர்ப்பிக்கிறார்.

சிவபெருமான் ஆலகால விஷத்தை உண்டவன். அந்த நஞ்சு பளபளவென்று நீல நிறமாக இருந்தது.

**ஒளி நஞ்சம்**

என்று அதைச் சொல்கிறார் அம்மையார்.

அந்தக் கரிய நஞ்சை இறைவன் வாங்கி உண்டான். வாயில் இட்டு விழுங்கினான். தன் கண்டத்தில் நிறுத்திக் கொண்டான். அங்கே அது நீலநிறத்தோடு நிற்கிறது.

**''கறை நிறுத்திய கண்டன்''**

என்பார் பரஞ்சோதி முனிவர்.

அவ்வாறு உண்ட நஞ்சம் கழுத்தில் நீல நிறத்தை உண்டாக்கியது. அதனால் இறைவனுக்கு நீலகண்டன் என்ற திருநாமம் உண்டாயிற்று.



இறைவன் அதை விழுங்கியபோது வாய் வழியாகத்தானே உள்ளே சென்றது? அப்போது அந்த வாயும் நீல நிறத்தை அடைந்திருக்க வேண்டுமே! தாம்பூலத்தை உண்டவர்களின் கண்டம் சிவப்பதில்லை; வாய் சிவக்கிறது. அவ்வாறு நஞ்சத்தை உண்ட திருவாய் நீல நிறம் பெற்றிருக்க வேண்டுமே! உண்ட வாய் நிறம் மாறாமலே சிவந்திருக்க, கண்டம் மாத்திரம் இருள் நிறம் கொண்டு விளங்குகிறதே! கண்டத்தினுள் அடங்கிய நஞ்சு மிக்க கறுப்புடையதாகையால், அங்கே தன் ஒளியைப் புறத்திலும் வெளிப்படும்படி செய்கிறது. அப்படி இருண்ட நஞ்சு வாயையும் அல்லவா கறுத்திருக்கச் செய்ய வேண்டும்? இங்கே அப்படி இல்லையே!

''இதற்கு என்ன காரணம்? இதை நீயே சொல்லியருள வேண்டும்'' என்று இறைவனைக் கேட்கிறார் அம்மையார்.

**ஒளிநஞ்சம்**
**உண்டவாய் அஃது இருப்ப**
**உன்னுடைய கண்டம் இருள்**
**கொண்டவாறு என்? இதனைக் கூறு.**

'அதனை உண்ட வாயானது தன் இயல்பான நிறம் கெடாமல் இருக்க, கண்டம் மாத்திரம் கறுப்பானது ஏன்?' என்று கேட்கிறார்.

**ஒளிவிலி வன்மதனை ஒண்பொடியா நோக்கித்**
**தெளிவுள்ள சிந்தனையில் சேர்வாய்,**
**—ஒளிநஞ்சம்**
**உண்டவாய் அஃதுஇருப்ப உன்னுடைய**
**கண்டம் இருள்**
**கொண்டவாறு என்? இதனைக் கூறு.**

[எம்பெருமானே, ஒளியையுடைய கரும்பு வில்லை உடைய வன்மையான காமனை சாம்பராகும்படி திருவிழியால் பார்த்து, ஞானத்தினால் தெளிவுபெற்ற அன்பர்களின் சித்தத்தில் தங்கி வடிவத்தைக் காட்டும் ஐயனே, ஒளியையுடைய ஆலகால விடத்தை உண்ட வாய் தன் நிறம் மாறாமல் இருக்க, உன்னுடைய திருக்கழுத்து மட்டும், கரிய நிறத்தை அடைந்த வண்ணம் ஏன்? இதை எனக்குத் தெளிவாகச் சொல்வாயாக!

ஒளி விலி—ஒளித்த வில்லையுடையவன் என்றும் பொருள் கொள்ளலாம். விலி—வில்லி; இடைக்குறை. தன் போர்க் கருவி

யாக மென்மலரைக் கொண்டாலும் அவன் வலியவன்; எல்லாரையும் காம உணர்ச்சியில் அமிழும்படி செய்யும் வலிமையை உடையவன். 'வன்மதனை' என்றும் பாடம்.

ஒண்பொடியா—விளக்கம் பெற்ற சாம்பராகும்படியாக. நோக்கி—நெற்றிக் கண்ணால் பார்த்து. கண்ணைத் திறந்து நோக்கிய அளவிலே அவன் பொடியாகி விட்டான். அவனைச் சங்கரிப்பதற்கென்று இறைவன் பெருமுயற்சி ஏதும் செய்யவில்லை.

மன்மதன் கலங்கிய சிந்தையை உடையவன். இறைவன் மேல் அம்பை எய்ய வேண்டும் என்று தேவர்கள் அவனை ஏவிய போது முதலில் அவன் அதற்கு இசையவில்லை. ஆனால் தேவர்கள் வற்புறுத்தவே, விருப்பம் இல்லாமலே இறைவன் மேல் அம்புகளை எய்தான். தெளிவுள்ள சிந்தனை இல்லாமல் அதைச் செய்தான். அன்பர்களோ தெளிவுள்ள சித்தம் உடையவர்கள். சேர்தல் என்பது இடைவிடாது தரிசிக்கும்படி இருத்தல்.

ஒளி நஞ்சம்—பளபளப்பாக ஒளியைப் பெற்ற நஞ்சு. இறைவன் திருக்கழுத்தினுள் சென்றும் அதன் நிறம் புறத்தே தெரிவதிலிருந்து அது ஒளியையுடைய நஞ்சு என்பது புலப்படும்.

வாய் அஃது: அஃது, பகுதிப் பொருள் விகுதி. இருள்—கரிய நிறம்; ''இருளின் உருவென்கோ?'' என்று முன்பாட்டில் சொன்னார். கொண்டவாறு—அடைந்த விதம். என்—ஏன்; என்ன காரணம்?

சேர்வாய், இதனைக் கூறு என்க.]

அற்புதத் திருவந்தாதியில் வரும் 89—ஆம் பாட்டு இது.

---

## எவன் தியாகி?

ஓர் அரசன் ஒரு துறவியைப் பார்த்து அவர் காலில் விழுந்து வணங்கினான்.

''நீ எதற்காக என்னை வணங்குகிறாய்? நான் எந்த விதத்தில் உயர்ந்தவன்?'' என்று துறவி கேட்டார்.

''நீங்கள் எல்லாவற்றையும் தியாகம் செய்து துறவியாகிவிட்டீர்களே. அதனால் தான் உங்கள் தியாகத்தை மெச்சி உங்களை வணங்கினேன்'' என்றான் அரசன்.

உடனே உட்கார்ந்திருந்த துறவி எழுந்து நின்று அரசனை வணங்கினார்.

''ஐயையோ! அபசாரம், அபசாரம்! நீங்கள் எதற்காக என்னை வணங்குகிறீர்கள்?'' என்று கேட்டான் அரசன்.

''நீ என்னைவிடப் பெரிய தியாகி. அதனால் உன்னை வணங்கினேன்.''

''நான் எப்படி உங்களைவிடப் பெரிய தியாகி ஆவேன்?''

''நீயே சொல்லு, சிறிய பொருளுக்காகப் பெரிய பொருளைத் தியாகம் பண்ணுகிறவன் பெரிய தியாகியா? அல்லது, பெரிய பொருளுக்காகச் சிறிய பொருளைத் தியாகம் பண்ணுகிறவன் பெரிய தியாகியா?''

''இதில் என்ன சந்தேகம்? சிறிய பொருளுக்காகப் பெரிய பொருளைத் தியாகம் பண்ணுகிறவன்தான் பெரிய தியாகி.''

''அதனால்தான் சொன்னேன்,'' நீ என்னைவிடப் பெரிய தியாகி என்று. நான் பேரின்பத்தை அடைய வேண்டுமென்று இந்த உலகின் சிற்றின்பங்களைத் துறந்துள்ளேன். ஆனால் நீயோ இந்த உலகின் சிற்றின்பங்களுக்காகப் பேரின்பத்தையே தியாகம் செய்துள்ளாய்'' என்றார் துறவி.

# கைவல்ய நவநீதம் - விளக்கவுரை

சுவாமி அமரானந்தர்

பிரம்மமும் ஜகத்தும் எப்படி இணைந்திருக்கின்றன என்பதை இந்தப் பாடல் உதாரணத்தின் மூலம் விளக்குகிறது.

படமும் நூலும் போலச் செய்த பணியும்
பொன்னும் போல் பார்க்கில்
கடமும் மண்ணும் போல ஒன்றும் காரிய
காரணங்கள்
உடல் முதல் சுபாவம் ஈறு ஒன்றில் ஒன்று
உதித்தவாறே
அடைவினில் ஒடுக்கிக் காண்பது அபவாத
உபாயம் ஆமே.

[படம்-துணி; பணி-செய்யப்பட்ட ஆபரணம்; கடம்-இடம்; சுபாவம்-குணம், மனம், அறியாமை; அடைவினில்-முறையாக.]

நூல் காண்பதற்குத் துணியைப் பிரித்தல் போலவும், பொன் காண்பதற்கு ஆபரணங்களை அழிப்பது போலவும், மண் காண்பதற்குக் குடத்தை உடைப்பது போலவும் ஆத்மதரிசனம் காண்பதற்குக் காரிய உபாதியாக உள்ள உடலை, சுபாவமான மனதிலும், மனதைப் புத்தியிலும், புத்தியை ஆத்மனிலும் அவை வந்தவாறே திரும்பவும் முறையாக ஒடுக்கிக் காண்பது அபவாத உபாயமாகிறது.

ஸத்தாகிய காரணப் பொருள் பிரம்மம். அது மித்யையாகிய காரிய ஜகத்தோடு எங்ஙனம் ஊடுருவியிருக்கிறது என்பதை எடுத்துக்காட்டி மூலத்தை அடையும் வழி இந்தப் பாடலில் சொல்லப்பெறுகிறது.

பருத்தி அல்லது பட்டுநூலினால் பின்னப்பட்டது துணி. துண்டுத் துணி ஒன்றை எடுத்து, அதிலுள்ள நூல்களை ஊசியின் உதவிகொண்டு. பிரித்து எடுத்தால் துணி மறைந்துவிடுகிறது. எஞ்சியிருப்பது நூலே. பொன்னால் செய்த ஆபரணங்கள் பல வகையாகக் காட்சியில் இருக்கின்றன. எல்லாவித ஆபரணங்களையும் உலையில் இட்டு உருக்கினால், ஆபரணங்களின் உரு மறைந்து; பொன்னாக மாறிவிடுகிறது. மண்ணால் செய்த பாண்டத்தை உடைத்து நொறுக்கினால் பாண்டம் என்ற வடிவம் மறைந்து மண்ணாகிவிடுகிறது. துணி, ஆபரணம், குடம் ஆகிய இவற்றுக்கு மூலப் பொருள்கள் முறையே நூல், பொன், மண் ஆகின்றன. இவை துணி, நகை, குடம் ஆகியவை செய்வதற்குக் காரணப் பொருள்களாக இருக்கின்றன. காரணப் பொருள்களான நூல், பொன், மண் இவை உருவாக்குதல் என்ற காரியத்தில் ஈடுபடுத்தப்பட்டுத் துணி, நகை, குடம் ஆகிய காரியப் பொருள்களாக அமைகின்றன. அங்ஙனம் காரிய உபாதி பெற்றுக் காட்சியில் இருக்கிற உடல், அதற்கு உரிய சுபாவமான குணங்கள் ஆகிய இவற்றை அறிவைக் கொண்டு ஆராய்ச்சி செய்யும் போது, அவை தாமாகவே மறைந்து, காரணப் பொருள்களான பிரம்மமே எஞ்சி நிற்கும்.

அடைவினில் ஒடுக்கிக் காண்பது என்பது, விரிந்து இருக்கும் பொருளை முறையாக ஒடுக்கித் தனக்குத் தானே விசாரிப்பது ஆகும். அதாவது, காரணப் பொருளான பரம்பொருளின் மேல், கற்பனையாகக் காரிய உபாதியான சிருஷ்டி முறையாக வந்தது; மூல சூக்கும தூல ஆரோபங்கள் வரிசையாக வந்துள்ளன. இவை வந்த வழியே திரும்பவும் ஒடுக்கிக் காணும்பொழுது, அதாவது உடலைச் சுபாவமான மனதிலும், மனதைப் புத்தியிலும், புத்தியை ஆத்மனிலும் ஒடுக்கிக் காணும்போது ஆரோபிக்கப்பட்ட அனைத்தும் மறைந்து போய் விடுகின்றன. எஞ்சியிருப்பது பேரறிவு மயமான பரமாத்மா ஒன்றே. ஆராய்ந்த சீவன் ஒடுங்கும்போது அது சிவன் ஆகிவிடுகிறது. 'தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்' என்பது திருமூலரின் திருவாக்கு.

உதித்தவாறே அடைவினில் ஒடுக்குதல் என்பதைப் பகவான் ரமண மகரிஷி.

''உதித்த இடத்தில் ஒடுங்கியிருப்பதே கர்மம், பக்தியோகம், ஞானம் ஆகிய அனைத்து யோகங்களாகும்'' என்று போதிக்கிறார். இங்ஙனம் ஆராய்ந்து தெளிவதே விவேகிகளுக்குப் பொருத்தமான அபவாத உபாயமாகிறது. இந்த உபாயமே 'இது அல்ல, இது அல்ல' என்று ஒதுக்கிக் காணும் நேதி மார்க்கமும் ஆகிறது.

ஈசனும் ஆய் அருவாய் உருவாகி எழுந்து
அருளும் குருவே,
ஈசனும் ஞானியும் ஒப்பு என்றீரே எப்படி
ஒப்பு என்றால்,
ஈசனும் ஞானியும் மமதை அகந்தை
இகந்ததனால் ஒப்பாம்,
ஈசனும் ஆம் பல சிவரும் ஆம் உலகு
எல்லாம் இவன் ஆமே.

(இகந்ததனால்-இழந்ததனால்.)

அகங்கார மமகாரம் நீங்கும்போது ஈசனும் ஞானியும் ஒன்றாகிவிடுகின்றனர்; அதாவது அத்வைத நிலையை அடைந்து விடுகின்றனர். அத்வைத திருஷ்டியில் ஞானிக்குத் தோற்றமெல்லாம் தானாகவே இருப்பது புலனாகிறது.



மேற்கண்ட பாடலில் கேள்விக்கு அடிப்படையாக, சீடன் பிரம்மஞானியாகிய குருவையே அருவாய் உருவாய் உள்ள ஈசனுக்கு ஒப்பிட்டு அவரிடம் ஐயத்தைக் கிளப்புகிறான். ஸ்தூலத்தில் அவர் உருவமாகவும், பனப்பரிபாக நிலையிலே அவர் அருவமாகவும் விளங்கி, ஈசனுக்குச் சமமாகிறார். ஈசனும் ஞானியும் எப்படி ஒப்பாவார்கள் என்பது கேள்வி.

அஞ்ஞானிக்குத் தான் அந்தக்கரணங்களுடன் கூடிய சரீரம் என்ற அகந்தையும், தனக்கு வீடு வாசல் தோட்டம் துரவு மனைவி மக்கள் முதலானவை உடைமையாய் இருக்கின்றன என்ற பந்துத்வ மமதையும் இருக்கின்றன. ஞானி இந்த அகந்தை மமதையைக் கடந்தவன். ஈசனிடத்தும் அகந்தை மமதை இல்லை. அகந்தை மமதை இழந்த தூய மனம் ஈசுவரத் தன்மையைப் பெற்றுவிடுகிறது. 'பிரம்மத்தை அறிந்தவன் பிரம்மமாகிறான்' என்று வேதம் கூறுகிறது. பிரம்மத்தில் கரைந்த மனம் பிரம்மமாகி விடுகிறது.

உள்ள ஒரே பொருளாகிய பிரம்மத்தில் தோன்றிய மனமும் ஒன்றே ஆகிறது. செயலற்ற பிரம்மம் செயற்படுகிற மனமாக அதாவது சக்தியாகத் தோற்றத்துக்கு வரும்போது அந்தச் சக்தியும் ஒரே சக்தி தான். மின்சக்தி பல விதமாகச் செயற்படுவது போல, அஞ்ஞானிகளுக்கு, சக்தி பல விதமாகச் செயற்படுகிற பிரபஞ்சமாக இருக்கிறது. எனவே, பல ஜீவர்களிடத்தில் பல விதமான மனம் அதாவது சக்தி இருப்பதாகத் தென்படுகிறது. மின் சக்தியின் நுட்பம் தெரியாதவனுக்கு, விளக்கு எரிவது ஒரு மின்சக்தியாகவும், யந்திரம் இயங்குவது வேறொரு மின்சக்தியாகவும், குளிர்சாதனங்களைச் செய்வது மற்றொன்றாகவும், உஷ்ணத்தை உண்டாக்குவது இன்னொன்றாகவும் தென்படும்.

ஆனால், மின்சக்தியின் நுட்பம் உணர்ந்தவனுக்கு அவை எல்லாம் ஒரே மின் ஜனனியிலிருந்து (ஜெனரேட்டர்) வரும் மின் சக்தி என்பது தெளிவாகிறது. அங்ஙனமே, தெளிந்த ஞானிக்கு, வலிமை வாய்ந்த ஜீவர்களின் மனமும் சக்தியும் ஒன்றே என்பது தெரிய வருகிறது. அப்படித் தெரியும்போது ஞானியின் மனம் தூயதாகிறது.

எங்கும் உள்ள ஒரே சக்தியே தன்னிடத்திலும் மற்றவர்களிடத்திலும் பிரிந்து காணப்படுகிறது என்பதை ஞானி அறிகிறான். அப்போது எல்லாவற்றிலும் தானே இருப்பதாக உணர்வதனால் அவன் ஈசுவரத்தன்மை பெற்றுவிடுகிறான். தானே எல்லா ஜீவர்களுமாக ஆகிறான் அதாவது—'உள்ளது ஒரு பொருள்; அதுவே இத்தனை விதமாகத் தோற்றத்தில் இருக்கிறது' என்பதை ஐயமற அறிந்து கொள்ளுகிறான். வடிவங்கள் பலவாகத் தோன்றிக்கொண்டிருப்பது தன் மனத்தின் காட்சியே என்பதையும் அறிகிறான்.

இங்ஙனம் பல வடிவாகத் தோன்றிக் கொண்டிருக்கும் ஈசுவரத்தன்மையை அவன் பெற்றுவிடுவதனுல் ஈசனும் ஞானியும் ஒப்பாகின்றனர். ஈசுவரத்தன்மை பெற்ற சுவாமி விவேகானந்தரின் வீரவாக்கு வருமாறு—

''உலக முழுவதும் இயங்கும் ஓர் உயிர் இருக்கிற வரையில், நானும் அதில் உறைகிறேன். தனியுறப்பட்ட இந்தச் சிறிய உயிர் நானல்ல. அகண்ட வடிவமான பரமாத்மாவே நான். முன்பு இறந்து போனவர்களுடைய உயிரெல்லாம் நானே. புத்தர், இயேசுநாதர், முகம்மது இவர்களுடைய ஆன்மாக்களும் நானே. எல்லா ஆசிரியர்களுடைய ஆன்மாவும் நானே. கொள்ளையடித்தவர்களும் நானே. கொலை புரிந்து தூக்கிலிடப்பட்டவர்களும் நானே. அகிலமும் நானே.''

ஒப்பிடு:

நிர்விகல்ப நிராகார வடிவம் நான். அகண்டாகாரமாதலால் நான் எங்கும் இருப்பவன். இந்திரியங்களில் எனக்குப் பற்றுதல் இல்லை. இந்திரியங்களால் அறியப்படாதவனுகிய எனக்கு முக்திநாட்டம் தேவையில்லை. சிதானந்த ரூபமாகிய சிவம் நான், சிவம் நான்.

—சங்கரரின் நிர்வாண ஷட்கம்.

மதுரநாத விசுவாசர் ஒரு தடவை என்னைப் பார்த்துப் பகர்ந்ததாவது— ''ஐயனே, உங்களுக்குள் ஈசனைத் தவிர வேறு ஒன்றும் இல்லை. உடலே வெளித் தோற்றத்துக்கு வடிவம் உடையதாய்த் தென்படுகிறது. ஆனுல், பூசனிக்காய்க்குள் ஒன்றும் இல்லாதிருப்பது போல, இந்த உடலினுள் மானுட வியக்தி ஒன்றுமில்லை.''

—ஸ்ரீராமகிருஷ்ண உபதேசம்.

## அபிடேக பலன்



அபிடேகப் பிரியரான சிவபெருமானை எந்த எந்தப் பொருளால் அபிடேகம் செய்தால் என்ன என்ன பலனை அடையலாம் என்று நம் ஆகமங்கள் கூறுகின்றன. சந்தனுதி தைலத்தால் அபிடேகம் செய்தவர்கள் சுகத்தையும், அரிசி மாவினுல் அபிடேகம் செய்தவர்கள் மலநாசத்தையும், மஞ்சள் பொடியினுல் அபிடேகம் செய்தால் ராஜவசியத்தையும், பஞ்ச கவ்யத்தால் அபிஷேகித்தவர்கள் ஆன்ம சுத்தியும், ரச பஞ்சாமிர்தத்தால் அபிடேகம் செய்தால் வெற்றியையும், பல பஞ்சாமிர்தத்தால் அபிடேகம் செய்தால் செல்வத்தையும், பாலினுல் அபிடேகம் செய்தால் ஆயுள் விருத்தியையும், தயிரினுல் அபிடேகம் செய்தால் பிரஜாவிருத்தியையும், நெய்யினுல் அபிடேகம் செய்தால் மோட்சத்தையும், தேனுல் அபிடேகம் செய்தால் சங்கீத வன்மையையும், கருப்பஞ்சாற்ருல் அபிஷேகித்தவர்கள் நித்ய சுகத்தையும், சர்க்கரையினுல் அபிடேகம் செய்தால் சத்துருநாசத்தையும், வாழைப்பழத்தினுல் அபிடேகம் செய்தால் பயிர் விருத்தியையும், பலாப்பழ அபிடேகம் லோக வசியத்தையும், எலுமிச்சம் பழத்தினுல் அபிடேகம் செய்தால் மிருத்யு நிவாரணத்தையும், அன்னத்தால் அபிடேகம் செய்தால் அரசுரிமையையும், இளநீரால் அபிடேகம் செய்தால் சற்புத்திரப் பேற்றையும், அபமிருத்யு நாசத்தையும், கோரோசனையால் அபிடேகம் செய்தால் தீர்க்காயுளையும், பச்சைக் கர்ப்பூரத்தால் அபிடேகம் செய்தால் பயநாசத்தையும், கஸ்தூரியால் அபிடேகம் செய்தால் வெற்றியையும், பன்னீரால் அபிடேகம் செய்தால் சாலோக்கியத்தையும், சந்தனக் குழம்பால் அபிடேகம் செய்தால் ஸாயுஜ்யத்தையும் அடைவார்கள்.

# ஞானயோகம்

ஆத்திரேய சுந்தரநாராயணன்

ஞானம் என்பது என்ன? 'நான், எனது' என்பவற்றைத் துறந்து ஆன்மிக வாழ்வில் கிடைக்கப்பெறும் பேறு இது. புத்தியி னின்றும் இது வேறுபட்டது.

உலகத்திலுள்ள பொருள்களைப் புத்தியி ஞல் அறிகிருேம். ஞானம் அந்த அறிவிஞல் வந்த பயன். புத்தி, உண்மையின் ஒரு பகுதியை மட்டும் தவருகவோ சரியாகவோ அறிகிறது; ஞானம், உண்மையின் முழுப் பகுதிகளையும் சரியாக அறிகிறது. புத்தி, உண்மையைப் புரிந்துகொள்கிறது; ஞானம், அதை வெளிப்படுத்துகிறது. புத்தி, இடம் காலம் என்ற வரம்புகளுக்கு உட்பட்டது; ஞானம், அந்த எல்லைகளைக் கடந்தது. 'அறிவு' என்ற சொல், புத்தி என்ற கருவியையும், சில சமயம் அறியப்பட்டதையும் குறிக்கும்.

ஞானம் இடைவிடாத தியானம், பரா பக்தி, காம்யம் அற்ற கர்மம் இவற்ருல் கிடைக்கப்பெறுவது. பிரம்மம், ஜீவன், பிரகிருதி இவற்றைப் பற்றிய மெய்யறிவே ஞானம்.

நமது ஞானக் கண் திறந்தால், பரமனின் செயலையும் குணத்தையும் கண்டு நாம் வியந்து, இருட்டினின்று ஒளிக்குச் செல் வோம்; அறியாமை என்ற சாவினின்று அமிர்தம் ஆகிய சாகாமைக்குச் செல்வோம்.

யோகம் என்பதற்கு மார்க்கம், அதிர்ஷ் டம், முயற்சி, சக்தி, பிணைப்பு என்ற பல பொருள்கள் உண்டு. இங்கு யோகம் என்பது ஜீவாத்மாவைப் பரமாத்மாவுடன் இணைக்கும் முறையாகும்.

இந்த இணைப்பு எத்தன்மையது என் பதில் அத்வைத, விசிஷ்டாத்வைத, துவைத சித்தாந்தங்களுக்கிடையே கருத்து வேறு பாடுகள் உள்ளன. ஞான நூல்களான உபநிடதங்களையும் பிரம்மஸூத்ரங்களையுமே இவற்றிற்கு அடிப்படையாக இந்தச் சித்தாந்திகள் கொள்கின்றனர். வேதவாக் கியங்களுக்குப் பொருள் காண்பதில்தான் இந்த வேறுபாடுகள். ஒவ்வொரு சித்தாந் தியும் தனது சித்தாந்தமே, தனது முடிவே, பரஞானத்தை அளிப்பதாகக் கூறுகிருர்.

அத்வைதம் என்ருல், 'இரண்டாவது பொருள் இல்லை' என்று பொருள். பிரம்மம் ஒன்றே உள்ளது. ஜீவாத்மாவும் பரமாத் மாவும் ஒன்றே. உலகிலுள்ள ஜீவாத்மாக்கள் பிரம்மத்தின் பிம்பங்கள்; கதிரவனின் பல பிம்பங்கள் நீர்நிலைகளில் தோன்றுவது போல் உள்ளனர். பிரம்மம் நிர்க்குண மானது; அது ஒன்றே நித்தியமானது; ஒளிமயமானது; சத்தியம், ஞானம், அனந்தம், ஆனந்தம், நிர்மலம் ஆனது; அறிய முடியாதது; ஆனுல் பிரம்மஞானி அறிந்தவுடன் அவன் தளைகள் நீங்கும்.

பிரபஞ்சம் மாயை, நிலைக்காதது; கனவு, கானல்நீர் போன்றது; இருட்டில் கயிற்றைப் பாம்பென்று அறியாமையால் நினைக்கும் அத்தியாசம் (Superimposition) போன்றது.

ஜீவாத்மாவிற்கு உடல், இந்திரியங்கள் போன்ற உபாதைகளால் (குறைகளால்) பிறப்பு இறப்பு ஏற்படுகின்றன. 'நான் பிரம்மமே' என்ற ஞானம் பெற்றவுடன், மாயை விலகி, இறந்த பின்பு ஜீவாத்மா பிரம்மத்துடன், நதி கடலில் இணைவது போல் ஐக்கியமாகிறது. இதுவே பிறப்பு இறப்புச் சுழலிலிருந்து விடுதலையாகும் முக்தி. மாயையின் தொடர்பிஞல் நிர்க் குணப் பிரம்மத்தை ஸகுணப் பிரம்மம் என்ற ஈசுவரனுகக் கருதி நாம் வழிபாடு செய்கிருேம்.

கர்மயோகமும் பக்தியோகமும் இந்த ஞானம் பெறச் சாதனங்கள். அவித்யை நீங்கி ஞானம் பெற்றவுடன் ஜீவன்முக்தியும், உடலிலிருந்து ஜீவன் பிரிந்து பிரம்மத் துடன் ஐக்கியமாகும்போது விதேக முக்தியும் கிடைக்கப்பெறும்.

மாயைக்கு இருப்பும் அன்று, இன்மையும் அன்று; அது இன்னது என்று விளக்க முடியாதது; கானல் நீர் போன்றது என்பர். இந்தச் சித்தாந்தத்தை விளக்கியவர் ஆதி சங்கரர்.

விசிஷ்ட அத்வைதப்படி, பிரபஞ்சம் வேறு, ஜீவாத்மாக்கள் வேறு, பிரம்மம் வேறு. பிரபஞ்சம் உண்மையானது. பிரபஞ்சமும் ஜீவாத்மாக்களும் பிரம்மத்திற்கு உடல் போன்று இருப்பதனுல் பிரம்மம் ஒன்றே. அது ஸகல கல்யாண குணங்களையும் பெற்றது. ஜீவாத்மாவும் பரமாத்மாவைப் போல் நித்யம்; சுயப்பிரகாசமும் ஞானமும் பெற்றது. ஆனுல் சில ஜீவர்களுக்குத்தான் பரபக்தியால் ஞானம் ஏற்படும். பர ஞானத்தால் பரமபக்தி பெற்று ஜீவாத்மா முக்தி பெறுகிறது. முக்தி பெற்ற ஆத்மா பரமனின் குணங்களையும் சக்திகளையும் பெற்று ஸாம்யம் அடைகிறது. ஆனுல், முக்தர்களுக்கு ஆக்கல், காத்தல், அழித்தல், முக்தி அளித்தல் என்ற செயல்களில் அதிகாரம் கிடையாது.



பரமன் 'உடல் மிசை உயிரெனக் கரந்து எங்கும் பரந்துளன்' என்ருர் நம்மாழ்வார். முக்தன் பரமனுக்குச் சேவைசெய்து அவனது ஆனந்தத்தில் பங்கு பெறுகிருன். பிரம்மம் சத்தியம், ஞானம், அனந்தம் என்ற குணங்களைப் பெற்றது. அது ஞானம் என்ற குணமாக இல்லாமல் ஞானவடிவாக உள்ளது.

மாயை என்பது பரமனின் சக்தி; உண்மையானது; அது, பனிக்கட்டி நீர் ஆவது போல், மாறும் தன்மை பெற்றது. பிரம்மம் நிர்க்குணம் என்று கூறுவது, இழிந்த தன்மை எதுவும் பரமனுக்கு இல்லை என்பதைக் குறிக்கவே ஆகும்.

சித், அசித், ஈச்வரன் என்ற தத்துவத் திரயத்தில் 'சித்' அல்லது சேதனன் என்பது அறிவுடன் கூடிய ஜீவாத்மா. 'அசித்' என்பது அறிவில்லாத அசேதனப் பொருள். இது பிரகிருதி, காலம், சுத்த ஸத்துவம் என மூவகைப்படும். சுத்த ஸத்துவம் என்பது நித்ய விபூதி அல்லது பரம மண்டலம். லீலா விபூதி என்பது இந்த உலகம். எந்த மாறுதலுக்கும் காலம் காரணமாகும்; இது ஸத்துவம், ரஜஸ், தமஸ் என்ற திரிகுணம் அற்றது. பிரகிருதியிலிருந்து உடல், பிரபஞ்சம் முதலியன உண்டாயின. ஜீவாத்மா நித்யம். உலகம் உண்மை; அழிந்தாலும் வேறு பொருளாக அது மாற்றப்படும். 'விசிஷ்ட' என்ருல் சேர்க்கை. இது விசேஷத்துடன் கூடிய அத்வைதம். இதை விளக்கியவர் ராமானுஜர்.

துவைதிகள், விசிஷ்ட அத்வைதிகள் போன்று, ஜீவாத்மா, பரமாத்மா வெவ்வேறு என்பர். ஆனுல், ஜீவாத்மாக்கள் பரமாத்மாவின் உடல் போன்று இல்லை; பரமாத்மாவிடமிருந்து பிரிந்து, முக்தியின் போது அவனுக்குச் சேவை செய்யும் அடியவர்களாக இருப்பர். அப்போது பரமனது குணங்களில் ஸாம்யம் பெறமாட்டார்கள். முக்தியில் ஸாலோக்கிய ஸாமீப்ய ஸாரூப்யப் பதவிகளைவிட ஸாயுஜ்யப் பதவியே சிறந்தது. பிரபஞ்சம் உண்மையானது. கிருஷ்ணனை ஆராதிப்பதனுல் எளிதில் முக்தி பெறலாம். ஈசுவரனும் ஜீவனும் தனித்தனி இரண்டு தத்துவங்கள் என்று கொண்டதனுல் துவைதம் என்று இந்தச் சித்தாந்தம் கூறப்படுகிறது. மத்வர் என்ற ஆனந்ததீர்த்தர் இதை விளக்கினுர். இந்தச் சித்தாந்தமே ஞானம் என்று அவர் கூறினுர்.

சைவ சித்தாந்திகளும் விசிஷ்ட அத்வைதிகளே. 'முக்தி பெற்ற ஜீவாத்மா சிவன் ஆகிருன்' என்பதற்கு, சிவனின் தாளில் ஜீவனின் தலை இணைந்து, 'தாள் அலை' (தாடலை) இணைப்பு உண்டாகிறது என்று அவர்கள் கூறுகின்றனர். ஜீவர்கள் பாசத்தால் கட்டப்பட்டவர்கள்.

ஆணவம், கன்மம் (கர்மா), மாயை என்று பாசம் மூவகைப்படும். பதி (இறைவன்), பசு (ஜீவாத்மா), பாசம்

இவற்றின் உண்மையான இயல்புகளை அறிவதே ஞானம்.

சரியை (தாஸ மார்க்கம்), கிரியை (பூசை, பக்தியினுல் சத்புத்திர மார்க்கம்), அஷ்டாங்க யோகம் இவற்ருல் ஜீவாத்மா ஞானம் அடைவான். இதயத்தில் ஜீவாத்மா, பரமாத்மா ஆகிய இருவரும் உள்ளனர். ஞானம், ஞாதா (அறிபவன்), ஞேயம் (அறியப்படுவது) இவற்றைக் கடந்து நிர்விகல்ப ஞானம் பெற்று இறைவனை அடைதலே முக்தி என்று இவர்கள் கூறுவர்.

ஞானிகள் ஸமதர்சனம் பெற்றவர்கள். நமது இதயத்தில் தஹர ஆகாசத்தில் - சிற்றம்பலத்தில் - பகவான் அந்தர்யாமியாய் இருப்பதனுல் வாமதேவ ரிஷி கூறியது போல், 'நானே பகவான்' என்று கூறலாம். ஆனுல், பகவான் போன்று செயற்பட்டால் சிக்கல் ஏற்படும்; கோவிலுக்குச் சென்று இறைவணக்கம் செய்ய முடியாது. முக்தி பெற்றுப் பிரம்மத்துடன் இணைவதில் எவ்வித இணைப்பு என்பதைப் பிரம்மமே கவனிக்கட்டும்.

முண்டக உபநிடதம், ஒரு பிப்பல மரத்தில் இரண்டு பறவைகள் இருப்பதைக் கூறுகிறது. கீழ்க் கொம்பில் உள்ள பறவை இனிப்புக் காயும் கசப்புக் காயும் தின்று கொண்டு, மரத்தின் உச்சியில் கம்பீரமாக அமர்ந்த மற்றப் பறவையைக் கண்டது. படிப் படியாக மேலே சென்று அது உச்சியில் இருந்த பொன்னிறப் பறவையுடன் இணைந்தது.

ஞானியின் தன்மை என்ன என்பதை, பகவத்கீதையில் பகவான் கூறுகிருர். யோகம் உடையவனும், பக்தி உடையவனும் சிறந்த ஞானி ஆகிருன். ஞானி, பிராம்மணனிடமும் பசுவினிடமும், நாயினிடமும் புலையனிடமும் ஸமதர்சனம் உடையவன்; ஏனெனில், அந்தர்யாமியாய்ப் பரமன் எல்லோரிடமும் இருக்கிருன். ஞானி பரமனிடம் சரண் புகுந்து மன அடக்கம் பெற்று, நித்திய நைமித்திக கர்மங்களான வேள்வி, தானம், தவம் இவற்றைப் பகவானது மகிழ்ச்சிக்காகவே செய்து, கர்மபலனைத் தியாகம் செய்கிருன்; மகிழ்ச்சி, சினம், அச்சம், மனக் கிளர்ச்சி இவற்றிலிருந்து விடுபட்டவன், இன்ப துன்பம், மான அவமானம், இகழ்ச்சி புகழ்ச்சி, வெப்பம் குளிர்ச்சி முதலிய இரட்டைகளைச் சமமாய்க் கருதுபவன், எப்பொழுதும் முகமலர்ச்சியுடன் ஆனந்தமாக இருப்பவன், பொறுமை, தயை உள்ளவன், இருப்பதைக் கொண்டு திருப்தி பெற்றவன், இருப்பிடம் இல்லாதவனுய்ப் பரமபக்தி உடையவன், எவ்வுயிருக்கும் நன்மையை நாடி, இந்திரியங்களை அடக்கி ஜயித்து ஆன்ம தரிசனம் பெற்றவன், ஸத்துவ குணம் உடையவன், விருப்பு வெறுப்பு கர்வம் மோகம் இல்லாதவன், ஓடு கல் பொன் இவற்றைச் சமமாய்க் கருதுபவன், மனத் தெளிவு, அன்பு, மௌனம், பாண்டித்யம், சத்தியம், பாலசுபாவம், இனிய சொல் உடையவன், கர்மத்தில் பற்றும் பயனும் விட்டவன், திடத்துடன் மனம் வாக்குக் காயத்தை அடக்கி, உண்டியைச் சுருக்கி, தியான யோகத்தில் இருந்து பரமனே நினைவாக இருப்பவன், 'நான், எனது' என்பதை ஒழித்தவன்—இத்தகைய ஞானி, ஆத்மா எல்லாப் பொருளிலும் உறைவதாகவும், எல்லாப் பொருள்களும் ஆத்மாவில் உறைவதாகவும் காண்கிருன்.

ஞானி விவேகமும் வைராக்கியமும் உள்ளவன். உலகத்தில் இன்பப் பொருள்களில் பார்வை கேள்வி முதலியவற்ருல் வெறுப்பு ஏற்படுவது வைராக்கியம்.

'நான்' என்பது உடல் அன்று என்பதும், நித்திய அநித்தியப் பொருள்களைப் பற்றிய நிச்சய அறிவும் 'விவேகம்' எனப்படும். மருந்தைப் பருகாமல் மருந்தின் பெயரை உச்சரிப்பதனுல் நோய் போய்விடாது. ஞானிக்கு அனுபவம் வேண்டும். பிரம்மத்தைப் பற்றிய பேச்சினுல் மட்டும் முக்தி கிட்டாது.

ஞானிக்கு அஹிம்சை, வாய்மை, திருடாமை, பிரம்மசரியம், பிறர் கொடையைக் கொள்ளாமை முதலிய யமமும், தவம், சுத்தம், திருப்தி, ஆன்ம விசாரணை, ஆராதனை முதலிய நியமமும் வேண்டும். கடந்ததைப் பற்றிச் சிந்திக்காமை, வரப் போவது பற்றிக் கவலைப்படாமை வேண்டும். பொருமை பகைமை போன்ற ரஜோகுணங்களும், அஜாக்கிரதை சோம்பல் முதலிய தமோகுணங்களும் அற்றவனுக ஞானி இருப்பான்.

பிரம்ம ஞானம் பெறுவதற்கு நான்கு வகைச் சாதனங்களை ஆதிசங்கரர் கூறுகிறார். (1) நித்திய அநித்தியப் பொருள்களைப்பற்றிய பகுத்தறிவு, (2) இம்மையிலும் மறுமையிலும் கர்மத்தின் பயனாக ஏற்படும் இன்பத்தில் பற்றின்மை, (3) சமம், தமம், உபரதி, திதிக்ஷை, சிரத்தை, ஸமாதானம் என்ற ஆறு வகைச் சம்பத்துக்கள், (4) முக்தியில் ஆர்வம் இவை வேண்டும்.

இந்திரியங்கள் நாடும் சப்தம், கந்தம் முதலிய பொருள்களில் வெறுப்படைந்து, தனது குறிக்கோளில் மனதை அடக்குவது சமம். கர்மேந்திரியங்களையும் ஞானேந்திரியங்களையும் நாடிச் செல்லும் மனதைப் பொருள்களிலிருந்து திருப்பி இருப்பிடத்தில் அடக்கி வைத்தல் தமம். வெளிப் பொருள்களின் மீதுள்ள மனதின் பிடிப்பை நீக்குதல் உபரதி. துன்பங்களைப் போக்கும் வழியைத் தேடாமலும், கவலை கொள்ளாமலும் பொறுத்துக்கொள்வது திதிக்ஷை. ஞான நூல்களின் உண்மையிலும் குரு உபதேச உண்மையிலும் சத்தியம் என்ற நிச்சய புத்தி பெறுவது சிரத்தை. பிரம்மத்தினிடம் புத்தியின் உறுதிநிலை இருப்பது ஸமாதானம்.

முக்தியில் ஆர்வம் உள்ள ஞானிக்கு, (1) வைராக்கியம், (2) அந்தக்கரணங்கள் (மனம், புத்தி, அகங்காரம், சித்தம்), புறக் கரணங்கள் (ஞானேந்திரியங்களான மெய், வாய், கண், மூக்கு, செவி ஐந்தும், கர்மேந்திரியங்களான வாக்கு, கை, கால், குதம், பால்குறிகள் ஐந்தும்) அடக்கம், (3) பொறுமை, (4) பற்று வைத்த கர்மங்களில் துறவு இவை வேண்டும். உபநிடதங்களின் அர்த்தங்களைச் சிறந்த குருமூலம் கேட்க வேண்டும் (சிரவணம்). பிறகு அதைச் சிந்திக்க வேண்டும் (மனனம்). பிறகு நிதித்யாஸனம் (தெளிதல்). நிஷ்டை கூடல் வேண்டும். குரு ஞானம் பெற்று அல்லது ஞானசாதனம் பெற்று, வேதத்தை நன்கு கற்று, பாவமற்று, ஆசையற்று, பிரம்ம நிஷ்டை உடையவராக, விறகில்லாத நெருப்புப் போல் அமைதியுள்ளவராக, கடல் போல் கருணையுடையவராக, தன்னை வணங்கும் நல்லவருக்கு உறவினராக இருக்க வேண்டும். மாணவரின் ஐயங்களைப் போக்க வல்லமை பெற்றவராக அவர் இருக்க வேண்டும். பணிவாலும், பரிவு மிகுந்த கேள்வியாலும், சேவையாலும் மாணவன் அவரை அணுகும்போது ஞான உண்மைகளை அவர் வெளியிடுவார். மாணவன் குருவிடமிருந்து கேட்ட உண்மைகளை ஆராய்ந்து, நினைவைச் செலுத்திச் சிந்திக்க வேண்டும். 'நான்' என்பது என்ன? பரமாத்மாவிற்கும் ஜீவாத்மாவுக்கும் என்ன தொடர்பு? பிரபஞ்சம் எவ்வாறு உண்டாயிற்று? பிரகிருதியின் தன்மை என்ன? பரமனது தன்மை என்ன? எது நித்தியம், எது அநித்தியம்? எது மாயை? இவற்றை அறிய வேண்டும்.

ஆன்மா சுயம்பிரகாசமானது, ஞானமயமானது; ஆனால், ஒவ்வோர் உயிரிலும் அதன் தன்மை வெளிப்படுவது வேறுபடுகிறது; கர்மவினையால் பீடிக்கப்பட்டுப் பிறப்பு இறப்புச் சுழலில் ஆழ்கிறது. ஆன்மா நித்தியமானது, நிர்மலமானது. பிரம்மம் எல்லாப் பொருள்களிலும் ஊடுருவி அந்தர்யாமியாய் இருப்பதால் ஒவ்வொரு பொருளும் புனிதமானதே. பிரம்மம் சத்திய ஞான அனந்த வடிவாக உள்ளது; நிர்மலமும் எல்லையில்லா ஆனந்தமும் பெற்றது.

ஆராய்ந்து தெளிவு பெற்றவனை ஞானசாதகன் நிஷ்டை கூடி, தியானம் செய்து, ஆன்மாவை அனுபவிக்கிறான். தியானம் சமாதியில் முடிகிறது. அஷ்டாங்க யோகத்தின் அங்கங்கள் யமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி. ஆகவே, சமாதி, யோகத்தில் இறுதிநிலை ஆகிறது. இது ஸம்பிரஞ்ஞாத சமாதி, நிர்விகல்ப சமாதி என்று இரு வகைப்படும்.

தியானப் பயிற்சி செய்து வந்தால் பெறும் ஸம்பிரஞ்ஞாத சமாதியில் மனம் அமைதி பெறுகிறது; சூழ்நிலை உணர்வு மறைகிறது. தியானிக்கும் பொருளைப் பற்றித் தியானிப்பவன் முழு அறிவையும் பெறுகிறான். புதிய உண்மைகளும் திடீரென வெளிப்படும். அவனது அடங்கியிருக்கும் ஆற்றல்களும் வெளிப்படும். தியானிக்கும் பொருளுடன் யோகி ஒன்றுகிறான்.

வெளிப்படும் ஆற்றல்களை எட்டுச் சித்தி என்பர். (1) அணிமா - உடலைச் சுருக்கல், (2) மஹிமா - உடலைப் பெருக்கல், (3) லகிமா - அதை இலேசாகச் செய்தல், (4) கரிமா - அதைக் கனமாக்கிக்கொள்ளல், (5) வசித்வம் - எல்லாவற்றையும் தன் வசமாக்கிக் கொள்ளல், (6) ஈசத்வம் - எல்லாவற்றிற்கும் தலைவனாக இருத்தல், (7) ப்ராப்தி - நினைத்த பொருளைப் பெறுதல், (8) பிராகாம்யம் - நினைத்த இடத்துக்குச் செல்லும் வல்லமை. இயற்கையில் உள்ள பொருள்களின் இரகசியத்தையும் மற்றவரின் எண்ணங்களையும் இதனால் அறியக்கூடும். ஆனால், ஞானசாதனத்திற்கு இவை பயன்படா. ஒரு நிலைமையில் சமாதியில் தடையாகவும் இருக்கக்கூடும். ஆதலால் இந்தச் சக்திகளைப் பெற்றாலும் விலக்க வேண்டும் என்று ஸ்ரீராமகிருஷ்ணர் எச்சரித்தார்.

மனமும் மறைகிறது; பிராணனும் ஆன்மாவும் மட்டும் இருக்கும். உணர்வு பெற்றவுடன் ஞானி பரமனை நேரில் கண்டதாக உணர்கிறான். அச்சம், துயர், ஆசை ஒன்றும் அவனை நெருங்குவதில்லை. மனம் அமைதி பெறுகிறது. அன்புடன் ஞானி மற்றவரை முத்திநெறியில் செலுத்தி வாழ்கிறான்.

சமாதி முதிரும்போது திடீரெனப் பிராணனும் விலகிப் பரமனுடன் ஞானி ஐக்கியமாகிவிடுகிறான். இந்த நிலை நிர்விகல்ப சமாதி எனப்படும். ''இதிலிருந்து மறுபடியும் உணர்வுக்கு வர, சாதாரண ஞானிகளால் முடியாது; பகவான் ராமகிருஷ்ணர் போன்ற அவதார புருஷர்களுக்கு இது சாத்தியமாய் இருந்தது'' என்கிறார் சுவாமி விவேகானந்தர்.

ஆத்மஞானம் பெற விரும்பும் ஞானி, இந்திரியங்கள் மனம் புத்தி ஆகியவற்றை அடக்கி, ஊன்றிய பக்தியுடன் ஆத்மாவிடம் மனதைச் செலுத்துகிறான். உடலே தேராக, ஜீவனே பிரயாணியாய், புத்தியே சாரதியாய், கடினமான கடிவாளத்தால் இந்திரியங்களான குதிரைகளை இழுத்துப் பிடித்து அடக்குகிறான். சமாதியில் இருந்து பிரம்ம ஆனந்தம் பெற்றவன் உலகை மறந்து ஜீவன் முக்தன் ஆகிறான். பிரம்மத்தை அறிந்தவனுக்கு இங்கேயே முக்தி கிட்டுகிறது.

ஞானத் தீ, ஸஞ்சித கர்மம் எல்லாவற்றையும் சாம்பலாக்கி விடுகிறது. ஞானயோகம் முழுமையாக அனுட்டிப்பதற்குச் சிரமமானது. உலகைத் துறந்த சந்நியாசிகளே இதைச் சாதாரணமாய் அனுட்டிக்கின்றனர்.

''தங்கத்தைக் குப்பைமேட்டில் போட்டாலும் அது தங்கமாகவே இருக்கும். மீன்கொத்திப் பறவை நீரில் மூழ்கினாலும் அதன் சிறகில் நீர் ஒட்டுவதில்லை. சேற்றில் வாழும் மீனின் மீது சேறு படிவதில்லை. ஞானி நாட்டில் மக்களிடையே வசித்தாலும் அவனை ஒன்றும் கெடுக்காது'' என்றார் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர்.

''ஞானத்தைவிடத் தியானம் சிறந்தது; தியானத்தைவிடத் தியாகம் சிறந்தது'' என்கிறான் பகவான் கிருஷ்ணன்.

ஆனால் ஞானயோகத்தில் தியானமும் தியாகமும் அடங்கியன. ஈசாவாஸ்ய உபநிடதத்தில், 9, 11-ஆம் மந்திரங்களில், ''ஞானம் (வித்யை) மட்டும் அல்லது கர்ம (அவித்யை) மட்டும் முக்தி அடையச் சாதனமாகாது. ஞானயோகமும் கர்மயோகமும் வேண்டும்'' எனக் கூறப்படுகிறது.

''பிரம்மத்தைப் பற்றிய பேச்சினால் முக்தி கிட்டாது; அனுபவஞானம் வேண்டும்'' என்கிறார் சங்கரர். உண்மையான ஞானயோகத்தில் கர்மயோகமும் பக்தியோகமும் ஓரளவு கலந்துள்ளன. பின் கூறியவற்றுள் ஒவ்வொன்றிலும் மற்றவை ஓரளவு கலந்துள்ளன. ஏனெனில், ஈசுவர உபாசனமும், மற்றவர்க்கு உதவி புரிய நிஷ்காம்ய கர்மமும் ஒவ்வொரு சாதகனுக்கும் அவசியம். ஞானயோகத்தைப் பின்பற்றும் சில துறவிகள் பஞ்சம், வெள்ளம், தொற்றுநோய் பரவல் முதலிய காலங்களில் கர்மயோகமும் செய்து மக்களுக்கு உதவுவது இதற்குச் சான்று.

# கடவுளோடு வாழ்ந்தவர்

**சுவாமி கம்பீரானந்தர்**

சுவாமி விவேகானந்தரின் வேண்டுகோளின்படி அகோரமணி இரண்டொரு பக்தைகளுக்கு மந்திரம் கொடுக்க வேண்டியதாயிற்று.

இரண்டு பெண்மணிகள் தீட்சை வேண்டும் என்று கேட்டபோதும் கோபாலனின் அன்னை சம்மதிக்கவில்லை. அதைக் கண்ட சுவாமிஜி, ''உங்களை யாரென்று நினைத்தீர்? ஜபம் செய்வதில் வல்லவரான உங்களால் மந்திரம் கொடுக்க முடியாதென்றால் பின் யாரால் ஆகும்? வேறு ஏதும் முடியாவிட்டாலும் உங்களுடைய இஷ்ட மந்திரத்தைச் சொல்லிக் கொடுங்கள். அதுவே அவர்களுக்கு உதவும். உங்களுக்கு இன்னும் என்ன வேண்டும்?'' என்று கேட்டார்.

ஆசை ஏதுமே இல்லாத கோபாலனின் அன்னை தீட்சைக்குப் பின் குருதட்சிணை எதுவும் ஏற்றுக் கொள்ளவில்லை. இதை அறிந்த பலராம் பாபு, ''வேறு ஒன்றும் வாங்கிக் கொள்ள வேண்டாம்; குறைந்த பட்சம் பதினறு அணுவாவது வாங்கிக் கொள்ளுங்கள்'' என்றார்.

சிஷ்யைகள் கிடைப்பதனல் பணத்தாசை வந்துவிடும் என்று தோன்றியதனல், ஒவ்வொருவரிடமும் ஒரு ரூபாய் வீதம் வாங்கிக்கொண்டு, அவர்களை நோக்கி, ''என்ன தெரியுமா? மனதையும் பிராணனையும் கொடுக்க வேண்டும். பணம் என்ன! துச்சம்! மந்திரதீட்சை என்பது விளையாட்டுக் காரியமல்ல. குறைந்த பட்சம் பத்தாயிரம் முறையாவது நாமஜபம் செய்த பின்பு ஆசனத்தை விட்டு எழுந்திருங்கள்'' என்றார்.

காமார்ஹாடி தோட்டத்தில் பேய்களின் தொல்லை இருந்தது. தத்தரின் மனைவி இருந்தவரை பாராக்காரன் ஒருவன் காவல் இருந்தான். அது நின்றுபோகவே, சுவாமி சாரதானந்தர் தம் செலவிலேயே ஒரு தோட்டக்காரனை நியமித்தார். அவனைத் தவிர வேறு யாரும் அந்தத் தோட்டத்தில் தங்குவதில்லை.

சுவாமி விவேகானந்தரின் மறைவுபற்றி அறிந்து, கோபாலனின் அன்னை கீழே விழுந்தது காரணமாக எலும்பு முறிவு ஏற்பட்டபோது ஒரு பணிப்பெண் அங்கேயே தங்குமாறு ஏற்பாடாயிற்று. கோபாலனின் அன்னைக்கோ அவளை அனுப்பிவிடுவதிலே தான் விருப்பம். ''எப்போது போகப் போகிறாய்? இருப்பாய் அல்லவா? அப்படி என்றால் என்ன? ஏதோ கேட்கிறேன் என்று தவறாக நினைத்துக் கொள்ளாதே'' என்று சொல்வார்.

இதற்கு முன்பே இவருக்குச் சீதபேதி கண்டபோது, மணமாகாத பெண் ஒருத்தி துணையிருந்தாள். பிரம்மசாரி ஒருவர் ஹோமியோபதி மருந்து கொடுப்பதற்காக வருவதுண்டு. சுவாமி பிரம்மானந்தர், சாரதானந்தர், நிவேதிதை முதலியவர் இவரைக் காண அடிக்கடி வருவதுண்டு. சுவாமி விவேகானந்தரும் ஒரு முறை வந்திருந்தார்.

பணிப்பெண்ணைப் பார்த்து அகோரமணி, ''ஏன் இங்கு வந்தாய்? இங்கு இருப்பது மிகவும் சிரமம். எனக்குக் கோபாலன் இருக்கிறான். நீ எங்கே படுப்பாய்? ஓர் அறையைச் சுத்தப்படுத்து. எல்லா அறைகளும் பூட்டியிருக்கும். பூசாரி பிராம்மணனிடம் சொல்லு. ஒன்றைத் திறந்து தருவான். பார், ஏதேனும் சப்தம் கேட்டால் நிறைய ராமஜபம் செய். நான் முன்னதாகவே எச்சரித்து வைக்கிறேன். இங்கே பல விதமாக இருக்கும்'' என்று சொன்னார்.

இரவு அந்தப் பெண்ணுக்கு அக்கினிப் பரீட்சை நடந்தது. மேல்மாடியில் குடுகுடுச் சப்தம். ஜன்னலில் ஏதோ ஒலி. ஏதோ ஒரு நடுக்கம். இவை பற்றித் தெரிந்தும் கேட்டும் இதன் மத்தியிலேயே கோபாலனின் அன்னையின் நீண்ட ஆயுட்காலம் கழிந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணருடைய உபதேசம் காரண மாக எதிலும் ஆசையற்றிருந்த அகோர மணிக்கு யாரேனும் எதையேனும் கொடுக்க முன்வந்தாலும் அதை வாங்கிக்கொள்ள மாட்டார்.

ஒரு முறை ஒரு கொசுவலை வாங்கி வரச் சொன்னார். ஆனால் அன்பர் ஒருவர் ஒரு பெரிய கொசுவலையைக் கொண்டு வந்தார். இது அகோரமணிக்குச் சங்கடத்தைக் கொடுத்தது. வேறோர் அன்பரிடம் அதைக் கொடுத்துச் சிறியதாக ஒன்றைப் பதிலுக்கு வாங்கிக் கொண்ட பின்புதான் இவருக்குச் சமாதானம் உண்டாயிற்று.



ஒரு சிஷ்யை இவருக்கு ஏதாவது கொடுக்க வேண்டும் என்று விரும்பிய போது, ''நீங்கள் இன்னும் என்ன கொடுப்பீர்கள்? கோபாலன் எனக்கு இல்லாமை என்பதை எல்லா விதத்திலும் போக்கி விட்டான். வரும்போது சிறிதளவு காய்கறி கொண்டு வா; அதுவே போதும்'' என்றார். இத்தகைய சூழ்நிலையில் உலகத்தின் கண்ணுக்குப் புலப்படாத வகையிலேயே இவருடைய இறுதி மூச்சை விட்டு விடை பெற்றுக்கொண்டார்.

ஆனால், 1904-ஆம் ஆண்டு நோய் அதிகமாகியபோது ஸ்ரீராமகிருஷ்ணரின் பக்தர்களால் சும்மா இருக்க முடியவில்லை. அவரைக் கல்கத்தாவிலுள்ள பலராம் பாபுவின் வீட்டிற்கு அழைத்து வந்தனர்.

கடைசி முறையாக அகோரமணி தேவி காமார்ஹாடியை விட்டுப் புறப்படுமுன்பு சுவாமி பிரம்மானந்தரின் கட்டளைப்படி ஒரு சிறுவன் கல்கத்தாவிலிருந்து கொஞ்சம் பணத்தோடு வந்து, இந்த மூதாட்டியின் அனுமதி பெற்றுக்கொண்டு, இவர் வீட்டிலேயே தங்கியிருந்தான்.

கடைசி இரவு தூக்கத்திலிருந்து விழித்துக் கொண்டவனுக்கு, அன்னைக்கும் மகனுக்கும் பெரியதொரு வாக்குவாதம் நடப்பது கேட்டது. மகனோ இருட்டாக இருந்த போதிலும் கங்கையில் குதித்து நீந்த விரும்பினான். அன்னையோ, ''இரு இரு. இன்னும் காக்கை கூப்பில் எல்லாம் கூவவில்லை. என் சமர்த்துக் குழந்தை நீ. கிழக்கு வெளுக்கட்டும்; அப்போது குளிக்கலாம்'' என்று கொஞ்சுகிறார்.

காலையில் அந்தச் சிறுவன் கோபாலனின் அன்னையிடம், ''யாருடன் பேசிக்கொண்டிருந்தீர்கள்?'' என்று கேட்டான். இவரோ மிகவும் எளிமையாக, ''உனக்குத் தெரியாது போலிருக்கிறது. கோபாலன் எப்போதும் என்னுடன்தான் இருப்பான். அவனுடைய பிடிவாதமான நடத்தையைக் கண்டித்துக் கொண்டிருந்தேன்'' என்று பதில் கூறினார்.

பலராம் பாபுவின் வீட்டருகில் மற்றொரு சிறுவனின் வீட்டிற்குக் கோபாலனின் அன்னை செல்வதுண்டு. பால், வெல்ல அவல், ஸந்தேஷ் என்ற இனிப்பு முதலியவற்றை உண்பதுண்டு. அவர்கள் காயஸ்த வகுப்பைச் சேர்ந்தவர்கள். 1901-ஆம் ஆண்டு அகோரமணி தேவிக்குச் சீதபேதி கண்டபோது, சுவாமிஜியின் உத்தரவுப்படி அந்தப் பையன் ஒரு மாதகாலம் காமார்ஹாடியில் தங்கியிருந்தான்.

அன்பே மயமான கோபாலனின் அன்னை தமது அறையிலேயே அவன் படுத்துக் கொள்ளச் சம்மதித்திருந்தார். நகரும் சக்திகூட இல்லாத இந்த மூதாட்டி, கடுமையான வியாதியால் பீடிக்கப்பட்டிருந்தும், இரண்டு வேளையும் தாம் உடுத்திய துணிகளை மாற்றி நீண்ட நேரம் மாலையுடன் ஜபம் செய்வதை அந்தப் பையன் கவனித்தான். மற்றச் சமயங்களில் படுத்துக் கொண்டே கைவிரல்களைக் கொண்டு எண்ணிய வண்ணம் ஜபம் செய்வார்.

படுத்திருந்தபோதும் இவர் வாயிலிருந்து ராமகிருஷ்ண நாமம் வருவது கேட்கும்.

பலராமரின் வீட்டிற்கு வந்த சில நாட்களுக்குப் பின், நிவேதிதை இவரைத் தம் வீட்டிற்கு அழைத்துச் செல்ல விரும்பினர். உதார குணமுடைய அகோரமணிதேவி ஆனந்தமாக பஸூபாரா வீதியில் இருந்த 17-ஆம் எண்ணுள்ள வீட்டிற்குச் சென்ருர். சுவாமி விவேகானந்தரின் மானஸ புத்திரியான நிவேதிதை தம் அன்னையைப் போல் எண்ணி இவருக்குச் சேவை செய்தார். அருகில் இருந்த ஒரு பிராம்மணர் வீட்டில் அகோரமணிதேவியின் உணவிற்கான ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

நடப்பதற்குச் சக்தி இருந்த வரையில் இந்த மூதாட்டி ஒருவேளை உணவை அவர்களின் வீட்டிற்குச்சென்றே உண்டுவந்தார். இரவு அவர்கள் குடும்பத்தினர் யாரேனும் பூரி முதலியவற்றை இவருடைய அறைக்குக் கொண்டுவந்து தருவர். பின்னர் இருவேளை உணவும் இவரது அறைக்கே வரலாயிற்று.

மதியம் பருப்புடன் சோறு, உருளைக் கிழங்குக் கறி, இரண்டு மூன்று கறிவகை, இரவு நாலைந்து பூரி, வதக்கிய கறி, பால் ஆகியவை இவரது உணவாகும். கோபாலவின் அன்னை அப்பொழுது ஒரு சிறுமியைப் போல் சுபாவம் உடையவராக இருந்தார். ஒரு நாள் மதியம் உணவு அருந்தவே இல்லை. பணிப்பெண் வந்து பார்த்தபோது, சாப்பாடு அனுப்பியபடியே வைத்துக் கிடந்தது.

அதைக் கண்டு, ''இன்று என்ன கோபாலனுக்கு இத்தனை நேரம் ஆகிவிட்டது? சாப்பாடு கிப்பாடு ஒன்றுமில்லையா? ஆசனத்தில் அமர்ந்து கண்ணை மூடிக்கொண்டு அந்தத் துஷ்ட கோபாலனைக் கூப்பிடுங்களேன்'' என்று கடிந்துகொண்டாள்.

கண்ணைத் திறந்து கோபாலனின் அன்னை சிரித்துக்கொண்டே, ''நான் இனிச் சாப்பிட மாட்டேன் என்கிருன் கோபாலன்'' என்று சொன்னர். வேறு வழியின்றி, சிறிய குழந்தைக்கு ஊட்டுவது போல, பணிப்பெண் ஊட்டத் தொடங்கினள். இரவும் வெகு நேரம் சென்றபின் இதுபோலவே சிறிதளவு உட்கொண்டு கோபாலனின் அன்னை படுக்கச் சென்ருர்.

ஆகாரம் தவிர மற்றச் சமயங்களில் நிவேதிதை தாமே இவரைக் கவனித்துக்கொண்டார். ஒரு வேலைக்காரியையும் அமர்த்தியிருந்தார். இவ்வாறே சுமார் இரண்டு ஆண்டுக் காலம் சென்றது.

மெதுவாக அகோரமணியின் வாழ்நாள் குறைந்துகொண்டே வந்தது. முழுமையாகப் பேச்சு நிற்பதற்குச் சில நாள் முன்பு அன்னை ஸ்ரீசாரதாதேவியார் இவரைக் காண வந்தார். படுக்கையருகில் அமர்ந்ததும், அகோரமணிதேவி அன்னையை அடையாளம் கண்டுகொண்டவராய், ''கோபாலா, வந்துவிட்டாயா? வா வா, பார், ஒரு நாள் நீ என் மடியில் அமர்ந்திருந்தாய் அல்லவா? இன்று என்னை நீ உன் மடியில் அமர்த்திக் கொள்'' என்ருர்.

அகோரமணிதேவியின் தலையை ஸ்ரீஅன்னையார் தமது மடியில் இருத்திக்கொண்டு அன்போடு தடவிக் கொடுத்தார். மேற்கு வானத்தில் இரத்தம் போன்ற செம்மை பரவுவதைப் போல், விடைபெற்றுச் சென்று கொண்டிருந்த அகோரமணி தேவியின் கறுத்த முகத்தில் பரம சாந்தியின் ஒளி மின்னியது.

இன்னும் எதையோ வேண்டுவது போல இவர் கையை நீட்டினர். ஸ்ரீஅன்னையாருக்கு என்னவென்று புரியவில்லை. அப்போது இவர் ஸ்ரீஅன்னையை, கோபாலன் அதாவது ஸ்ரீராமகிருஷ்ணராகப் பாவித்து, அவருடைய பாததூளியை வேண்டுகிருர் என்று பணிப்பெண் எடுத்துக் கூறினள்.

அதன்பின் அவள் தன் முன்ருனையில் ஸ்ரீ அன்னையாரின் பாததூளியை எடுத்து அகோரமணிதேவியின் உடல் முழுவதும் பூசினள். அன்னையோ ஏதும் சலனமின்றி இருந்தார். அகோரமணிதேவி ஸ்ரீஅன்னையாரிடம் மாமியாரின் ஸ்தானத்தைப் பெற்றிருந்தார். தட்சிணேசுவரத்தில் உணவருந்திக்கொண்டிருந்த சமயத்தில் ஸ்ரீஅன்னையிடம் இவர், ''மருமகளே! என்ன சாப்பிடுகிருய்? எனக்குக் கொஞ்சம் கொடேன்'' என்று கேட்டார். ஸ்ரீஅன்னையோ, 'அடடா உங்களுக்கா! எப்படிக் கொடுப்பது?'' என்ருர். இன்று இந்த மூதாட்டியின் கடைசிக் காலம் நெருங்கிவிட்டதனல் அத்தகைய மறுப்பு ஏதுமே இல்லை. அன்னையார்

தியானத்தில் மூழ்கியிருந்தார். வெளி உலக நினைவே இல்லை. மறுப்பதற்கு யார் இருக்கிறார்கள் ?

அகோரமணிதேவி பிறந்தது கங்கைக் கரையில். வாழ்ந்ததும் அங்கேதான். உணவு சமைத்தது கங்கை நீரால்தான். தாகம் தணித்ததும் அதே நீர்தான். கங்கையுடன் அவரது வாழ்வு முழுவதும் ஊடும் பாவுமாக நெய்யப்பெற்றிருந்தது. அந்திம காலத்திலும் இவரைக் கங்கை நதி தீரத்திற்கே கொண்டு சென்றனர். நிவேதிதை வெறுங்காலுடன் நடந்து சென்று சந்தனம் புஷ்பம் முதலியவற்றால் இவருடைய கட்டிலை அலங்கரித்தார்.

கோபாலனின் அன்னையின் வாழ்க்கையின் கடைசி இரண்டு தினங்களை இவருடனே கழித்தார் நிவேதிதை. 1906-ஆம் ஆண்டு ஜூலை மாதம் 6-ஆம் தேதி உதயசூரியன் சிவந்த நிறத்துடன் கிழக்கே உதித்தபோது கோபாலனின் அன்னையின் உடல் கோபா பாஜார் ராஜாக்களின் கட்டத்தில் கங்கை நீரில் கிடத்தப்பட்டது. அப்போது அவரது இருகைகளும் மார்பருகே ஜபம் செய்யும் முத்திரையைக் காட்டின.

முகத்தில் ஒளி வீசிற்று. பக்தர்களின் குரல்களில் பவபயஹாரி தாரகப் பிரம்மத்தின் நாமம் எழும்பிற்று. கங்கைப் பிரவாகத்தின் ஒலியுடன் அது கலந்தது. அகோரமணிதேவி, கங்கையின் கர்ப்பத்தில் தமது இறுதி மூச்சை விட்டார்.

தேசத் தியாகத்திற்குப் பத்துப் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன்பிருந்தே இவர் தம்மை ஒரு சந்நியாசினியாக எண்ணிக் கொண்டார். எப்போதும் காவியுடையையே அணிந்துகொண்டார். பாக் பஜாரிலிருந்து கிருஷ்ணலால், சுவாமி பிரம்மானந்தரின் பத்துமுழ வேட்டியை எடுத்துச் சென்றார். பிறகு, ''பார், உன் துணியை உடுத்துக் கொண்டு உட்கார்ந்தால் எனக்கு நன்றாக ஜபம் செய்ய முடிகிறது'' என்றார்.

இவருடைய மறைவுக்குப் பின்பு நிவேதிதை இவருடைய ஜபமாலையை எடுத்துக்கொண்டார். இவர் பூஜித்து வந்த பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரின் படம் பேலூரில் ஸ்ரீஅன்னையாரின் கோயிலில் வைக்கப் பெற்றது. (முற்றும்)

## நீங்கள் ஆணா, பெண்ணா ?

ஒரு சாது ஒரு நகரத்துக்கு வெளியில் வசித்து வந்தார். பிச்சை வாங்குவதற்காக அவர் அடிக்கடி நகரத்தின் வழியே செல்ல வேண்டியிருந்தது. நகரத்தில் இருந்த ஒரு வேசி அவரைத் தன் வசப்படுத்த முயன்று தோல்வியடைந்துவிட்டாள். அந்தக் கோபத்தில் அவள் அவரைப் பார்த்து, ''நீ ஆணா, பெண்ணா?'' என்று கேட்டாள். அதற்கு அவர், ''இதற்கு ஒரு நாள் பதில் சொல்கிறேன்'' என்று சொன்னார்.

இப்படி வெகு காலம் நடந்து வந்தது. ஒரு நாள் வேசி வீட்டிற்கு ஓர் ஆள் வந்து ''உன்னைச் சாது அழைக்கிறார்'' என்றான்.

வேசி சாதுவின் குடிசைக்குச் சென்றாள். அங்கு அவர் சாகும் தறுவாயில் இருந்தார். அவர் வேசியைப் பார்த்து, ''நீ என்னை வெகு நாளாக ஒரு கேள்வி கேட்டுக் கொண்டிருக்கிறாய். அதற்கு இப்பொழுது பதில் சொல்கிறேன். நான் ஆண்தான்'' என்றார்.

அதற்கு வேசி, ''இந்தப் பதிலை முன்னமே சொல்லியிருக்கலாமே'' என்றாள்.

சாது, ''உருவத்தைக் கண்டு மாத்திரம் யாரையும் ஆணா பெண்ணா என்று சொல்லிவிட முடியாது. உலகத்தின் மாயையை வென்றவன்தான் ஆண். அதற்குக் கீழ்ப்படிந்தவர்கள் எல்லோரும் பெண்களே. உயிரோடிருக்கும் வரை யாரும் மாயையை வென்றுவிட்டதாக மார் தட்டிக்கொள்ள முடியாது. நானோ இப்போது சாகும் தறுவாயில் இருக்கிறேன். அதனால்தான் தைரியமாக நான் ஆண் என்று சொன்னேன்'' என்றார்.

# கற்பின் மாண்பு

நாடோடி

கற்பின் மகிமையை விளக்கும் மூன்று உத்தமியரின் வரலாறு இங்கே இடம்பெறுகிறது.

## சுபத்திரை

மகரிஷி காலவர் நதியில் நின்றுகொண்டு சந்தியாவந்தனம் செய்துகொண்டிருந்தார். சூரிய பகவானுக்கு அர்க்கியம் கொடுப்பதற்காக அவர் இரண்டு கைகளிலும் தண்ணீரை எடுத்ததுதான் தாமதம், ஆகாயத்தில் விமானத்தில் சென்றுகொண்டிருந்த சித்திரசேனன் என்ற கந்தர்வனின் தாம்பூல உச்சிஷ்டம் அவர் கையில் வந்து விழுந்தது. வானில் சென்றுகொண்டிருந்த கந்தர்வன் கீழே யார் இருக்கிறார்கள் என்று பார்க்காமல் தாம்பூலத்தைத் துப்ப, அது காலவரின் கையில் வந்து விழுந்தது.

காலவ ரிஷி மிக்க கோபம் அடைந்தார். கந்தர்வனைச் சபிக்க நினைத்தார். ஆனால் சபித்தால், அவர் தவம் குறையுமே! அதற்காகத் துவாரகையில் இருந்த கிருஷ்ணனிடம் சென்று முறையிட்டார்.

இதைக் கேட்ட கிருஷ்ணன், ''கவலைப்படாதீர்கள். உங்களை அவமானப்படுத்திய கந்தர்வனை நான் நாளைச் சூரியாஸ்தமனத்திற்குள் கொல்வேன்'' என்று வாக்குக் கொடுத்தான்.

இதை அறிந்த நாரதர், சித்திரசேனனிடம் சென்று, ''நாளைச் சூரியாஸ்தமனத்திற்குள் கிருஷ்ணன் உன்னைக் கொல்வதாக, காலவருக்கு வாக்குக் கொடுத்திருக்கிறான்'' என்றார்.

இதைக் கேட்ட சித்திரசேனன் திகைத்தான்; ''நான் அறியாமல் செய்த அபராதத்திற்கு இத்தனை பெரிய தண்டனையா! எப்பொழுது கிருஷ்ணனே காலவருக்கு வாக்குக் கொடுத்துவிட்டானோ, என் உயிர் போனதுதான்'' என்று அலறினான்.

நாரதர் அவனைச் சமாதானப்படுத்தினார். ''உன்னைக் கிருஷ்ணனிடமிருந்து காப்பாற்றும்படி இந்திரன், யமன், சிவன், பிரம்மா எல்லோரையும் கேட்டுப் பார்'' என்று சொன்னார்.

சித்திரசேனன் ஒவ்வொருவரிடமாகச் சென்றான்; ஆனால் எல்லாரும் கையை விரித்துவிட்டார்கள். ''கிருஷ்ணனை எதிர்த்து எங்களால் ஒன்றும் செய்ய முடியாது'' என்று சொல்லிவிட்டார்கள்.

''கவலைப்படாதே! உன்னைக் காப்பாற்றிக்கொள்ள இன்னொரு வழி இருக்கிறது. இன்று நடு இரவு யமுனா நதிக்கரையில் போய் உட்கார்ந்துகொண்டு அழு. யாராவது ஸ்திரீ தென்பட்டால், அவள் உன்னைக் காப்பாற்றுவதாக வாக்களித்தாலன்றி, உன் விஷயத்தைச் சொல்லாதே!'' என்று நாரதர் சொன்னார். சரி என்று சித்திரசேனன் ஒப்புக்கொண்டான்.

உடனே நாரதர் அர்ஜுனனின் மனைவியும், கிருஷ்ணனின் சகோதரியுமான சுபத்திரையிடம் சென்றார். ''அம்மா, உன் காரியங்கள் எல்லாம் சுபமாக முடிய வேண்டுமானால் இன்று நடு இரவு நீ யமுனை நதியில் ஸ்நானம் செய்து, யாராவது கஷ்டப்படுகிறவர் தென்பட்டால் அவர்களின் கஷ்டத்தை நீக்க வேண்டும். அப்பொழுது உனக்கு நிறையப் புண்ணியம் கிடைக்கும்'' என்றார்.

சரி என்று சுபத்திரை தன் தோழியர் சிலருடன் அன்று இரவு யமுனை நதிக்குச் சென்று ஸ்நானம் செய்துவிட்டுத் திரும்புகையில் யாரோ அழும் குரல் கேட்டது.

''என்னைக் காப்பாற்றுவார் யாரும் இல்லையா? ஒருவரும் என்னைக் காப்பாற்றப் போவதில்லை என்ருல் நான் நதியில் விழுந்து உயிரை விடப்போகிறேன்'' என்று சித்திர சேனன் சொல்லிக்கொண்டிருந்தான்.

அவனது குரலைக் கேட்டுச் சுபத்திரை அந்தப் பக்கம் வந்தாள். ''உங்களுக்கு என்ன ஆபத்து? சொல்லுங்கள்'' என்று கேட்டாள்.

''என்னைக் காப்பாற்றுவதாக வாக்களித்தால்தான் சொல்லுவேன். இல்லாவிட்டால் சொல்லமாட்டேன்'' என்ருன் சித்திர சேனன்.



''உங்களுக்கு என்ன ஆபத்து வந்திருந்தாலும் சரி, உங்களைக் காப்பாற்றுவது எனக்குக் கஷ்டமான காரியம் அல்ல. என் சகோதரர் கிருஷ்ணரும், என் கணவர் அர்ஜுனரும் இருக்கும்போது உங்களைக் காப்பது கஷ்டமன்று. ஆகவே நான் வாக்குக் கொடுக்கிறேன்'' என்று சொன்னுள்.

நடந்த விஷயங்களைச் சித்திரசேனன் சொல்ல, சுபத்திரை, ''கவலைப்படாதீர்கள். என் கணவர் அர்ஜுனர் உங்களைக் காப்பாற்றுவார்'' என்று சொன்னுள்.

தான் சித்திரசேனனுக்குக் கொடுத்த வாக்கைப்பற்றிச் சுபத்திரை அர்ஜுனனிடம் சொன்னுள். ''என் நண்பன் கிருஷ்ணனை எதிர்க்க வேண்டி வந்தாலும் கவலையில்லை. நான் சித்திரசேனனைக் காப்பாற்றுகிறேன். கவலைப்படாதே!'' என்ருன் அர்ஜுனன்.

அடுத்த நாள் கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்குமிடையே பலத்த போர் நடந்தது. இருவரும் சளைக்காமல் சண்டையிட்டார்கள்.

கடைசியில் கிருஷ்ணன் சக்ராயுதத்தை எடுத்ததும், அர்ஜுனன் பாசுபத அஸ்திரத்தை எடுத்தான்.

இதைக் கண்டதும், சிவன் அவர்களுக்கு முன்னுல் தோன்றி, கிருஷ்ணனைப் பார்த்து, ''அர்ஜுனன் உங்கள் பக்தன்; ஆகவே உங்கள் பக்தன் தன் வாக்கைக் காக்க முடியாத நிலையை நீங்கள் அவனுக்கு உண்டாக்கலாமா?'' என்று கேட்டார்.

சிவன் சொன்னது சரிதான் என்று ஒப்புக்கொண்டு கண்ணன் சண்டையை நிறுத்தினுன்.

இதைக் கண்டு காலவரிஷி மிக்க கோபம் அடைந்தார். ''நீங்கள் இருவருமே என்னை அவமானம் செய்த அந்தக் கந்தர்வன் பச்கம் சேர்ந்துவிட்டீர்களா? இதோ அவன் சாம்பலாகப் போகக்கடவது என்று அவனைச் சபிக்கப் போகிறேன்'' என்று ஜலத்தைக் கைபில் எடுத்தார்.

அப்பொழுது சுபத்திரை, ''நான் பதிவிரதை என்பது உண்மையானுல் அந்த ஜலம் அவர் கையிலிருந்து பூமியில் விழக் கூடாது'' என்று சொன்னுள்.

ஜலம் கீழே விழுந்தால்தான் சாபம் பலிக்கும். ஆனுல் பதிவிரதைக்கு முன்னுல் யார் என்ன செய்ய முடியும்? ஜலம் கையை விட்டுக் கீழே விழாமற் போகவே காலவர் தலைகுனிந்து அப்பால் சென்ருர்.

## பத்மாவதி

பக்த ஜயதேவரின் பத்தினி பத்மாவதி மிகச் சிறந்த பதிவிரதைகளில் ஒருத்தி. அவளுக்கும் அந்த ஊர் ராணிக்கும் நெருங்கிய நட்பு. ராணி அவளை மிக்க மரியாதையுடன் வரவேற்பாள். இவள் ராணிக்குப் பல நல்ல விஷயங்களை எடுத்துச் சொல்வாள்.

ஒரு நாள் இருவரும் பேசிக்கொண்டிருக்கையில் பத்மாவதி, ''கணவன் இறந்ததும் அவனோடு உடன்கட்டை ஏறி உயிரை விடுகிறாளே அவளை அத்தனை பதிவிரதை என்று சொல்ல முடியாது. கணவன் இறந்துவிட்டான் என்று கேள்வியுற்றதுமே எவள் உயிர் விடுகிறாளோ அவள்தான் உத்தம பதிவிரதை'' என்று சொன்னாள்.

ராணி ஏதும் பதில் சொல்லவில்லை. ஆனால், இதை ஒரு நாள் பரிட்சித்துப் பார்த்துவிடுவது என்று தீர்மானித்துக் கொண்டாள்.

ஒரு நாள் அரசன் வேட்டையாடச் சென்றிருந்தான். வழக்கம் போல் ஜய தேவரும் உடன் சென்றிருந்தார். மாலையில் சூரியன் அஸ்தமிக்கும் சமயம். அப்பொழுது ராணி அழுதுகொண்டே பத்மாவதியிடம் வந்தாள். ''அம்மா பத்மாவதி, உன் கணவர் ஜயதேவரைச் சிங்கம் அடித்துக் கொன்றுவிட்டதாம். இப்பொழுதுதான் தகவல் வந்தது'' என்று சொன்னாள்.

இதைக் கேட்டதும் பத்மாவதி, ''கிருஷ்ணா கிருஷ்ணா!'' என்றாள். அவள் உடலிலிருந்து உயிர் பிரிந்தது.

இதைக் கண்டு ராணி துடித்தாள். பத்மாவதியைப் பரிசோதிப்பதற்காக அவள் சொன்ன வேடிக்கையான பொய் இத்தனை விபரீதத்தை விளைவித்துவிட்டதே என்று துடித்தாள், கதறினாள்.

அந்தச் சமயத்தில் அரசனும் ஜயதேவரும் வேட்டையிலிருந்து திரும்பினார்கள்; விஷயத்தை அறிந்தார்கள். ஜயதேவர் மனைவி இறந்ததைப்பற்றிக்கூட அத்தனை வருத்தப்படவில்லை. ராணி இத்தனை துயரப்படுகிறாளே என்று கவலைப்பட்டார்.

அவர் ராணியைப் பார்த்து, ''அம்மா, கவலைப்படாதே. எப்பொழுது கணவன் இறந்தான் என்று கேட்டதும் உயிர் துறந்தாளோ அதே மாதிரி கணவன் இருக்கிறான் என்று கேள்வியுற்றதும் உயிர்பெறுவாள்'' என்று சொல்லிக் கடவுளைத் துதிக்க ஆரம்பித்தார்.

சிறிது நேரத்திற்கெல்லாம் கடவுள் அருளினால் தூங்கி எழுந்தவள் போல் பத்மாவதி கண்களை விழித்தாள்.

# அருந்ததி

வசிஷ்டரின் மனைவி அருந்ததியைப் போன்ற சிறந்த பதிவிரதை எங்கும் கிடையாது என்ற செய்தி தேவலோகத்திலும் பரவவே, இது உண்மைதானா என்று பரிட்சித்துவிட வேண்டும் என்று மூன்று தேவர்கள் பூலோகத்தை நோக்கி வந்தனர். அவர்கள் சூரியன், இந்திரன், அக்கினி ஆகிய மூன்று தேவர்களாகும்.

பூலோகத்துக்கு வந்த அவர்கள் அருந்ததி இடுப்பில் குடத்துடன் நதிக்குச் சென்றுகொண்டிருந்ததைப் பார்த்தார்கள். அவர்கள் அருந்ததியைத் தடுத்து நிறுத்தி, ''நாங்கள் உன்னைப் பார்க்கத்தான் வந்து கொண்டிருக்கிறோம்'' என்றனர்.

''தயவுசெய்து ஆசிரமத்தில் தங்கியிருங்கள். நான் போய்க் குடத்தில் தண்ணீர் கொண்டு வந்துவிடுகிறேன்'' என்று சொன்னாள் அருந்ததி.

''குடத்தில் தண்ணீர் கொண்டுவர நீ ஆறு வரை போக வேண்டாம். நானே என் தெய்விகச் சக்தியைக் கொண்டு உன் குடத்தைத் தண்ணீரால் நிரப்புகிறேன்'' என்றான் சூரியன்.

சூரியன் தன்னால் முடிந்த மட்டும் தன் சக்தியை உபயோகப்படுத்திப் பார்த்தான். ஆனால் அவனால் கால் குடத்திற்கு மேல் நிரப்ப முடியவில்லை.

''மீதியை நான் நிரப்பிவிடுகிறேன்'' என்று முன் வந்தான் இந்திரன், ஆனால் அவனாலும் என்ன முயன்றும் கால் குடத்திற்கு மேல் நிரப்ப முடியவில்லை.

''சரி, பாதிக் குடம் நிரம்பிவிட்டது. மீதியை நான் ஒருவனாகவே நிரப்பித் தருகிறேன்'' என்று முன்வந்தான் அக்கினி. ஆனால் அவனாலும் இன்னும் கால் குடம் தான் நிரப்ப முடிந்தது. அதற்கு மேல் நிரப்ப முடியவில்லை!

அப்பொழுது அருந்ததி, ''கவலைப்படாதீர்கள். மீதியை நான் நிரப்பிவிடுகிறேன்'' என்று சொல்லி, அவள் பதிவிரதைகளின் மகிமையைச் சொல்ல ஆரம்பித்ததுதான் தாமதம், மீதிக் குடம் உடனே நிரம்பியது.

இதைக் கண்டு ஆச்சரியப்பட்ட தேவர்கள் வந்த வழியே திரும்பினர்.

# திருப்பாவை, திருவெம்பாவை

என். கிரிதாரி பிரசாத்

நம் இந்து சமயத்தின் ஆதி நூல் ரிக் வேதம். இதனை உலக நூலகத்தின் முதல் நூல் என்பர். அனுபவமும் அனுபூதியும் மிக்க ரிஷிகள் இந்நூலை இயம்பினர். எழுதாக் கிளவியாக இருந்த வேதம் ரிஷிகளால் காக்கப்பெற்று நான்கு வேதங்களாக வந்துள்ளது. இதனை அறிஞர் வேதங்களை ஆக்குவார் இல்லை, நோக்குவாரே உண்டு என்பர்.

ரிக் ஸாம யஜுஸ் அதர்வ வேதங்கள் என்பன அவை. வேதங்களை எல்லோரும் எளிதில் கற்க இயலாது. வடமொழி ஞானமும், தக்க ஆசிரியரும், அதற்கு உகந்த ஆசிரம வாழ்க்கையும் தேவைப்படுகின்றன.

வேத உண்மைகளை மக்களுக்கு இயம்ப வந்தவையே பிற்காலத்தில் தோன்றிய இதிகாசங்களும் புராணங்களும் பக்திப் பிரபந்தங்களும் ஆகும்.

இந்திய நாட்டில் சிறப்பாகப் போற்றப் பெறும் சமயங்கள் இரண்டு. ஒன்று சைவம்; மற்றொன்று வைணவம். திருமாலே முழுமுதற் பொருள் என்பது வைணவம். சிவனே முழு முதற்பொருள் என்பது சைவம். சமயங்கள் இரண்டானாலும் சாரம் ஒன்றே. கண்கள் இரண்டானாலும் காட்சி ஒன்று என்றபடி, திருமால் சிவன் என்ற பேர்களால் இறைவனை நாம் அழைத்தாலும் பரம்பொருள் ஒன்றே.

தெளியாத மறைநிலங்களைத் தெளிவதற்கும், தோன்றாத உபநிடதப் பொருள் இவை என்று தெளிவதற்கும் ஆழ்வார்களின் அருளிச்செயல்களும், அவற்றுள் சிறப்பாக ஆண்டாளின் திருப்பாவையும், சைவநெறியின் சிறந்த நூலாக விளங்குகிற திருவாசகமும் வழிகாட்டுகின்றன.

நாலாயிர திவ்யப் பிரபந்தத்தின் ஓர் அங்கமாக விளங்கும் திருப்பாவையும், திருவாசகத்தின் ஓர் அங்கமாக விளங்கும் திருவெம்பாவையும் வெவ்வேறு ஆசிரியர்களால் பாடப்பெற்று இருப்பினும் நுதலும் பொருள் ஒன்றே. சுருக்கமாகவும் பொதுவாகவும் வைணவத்தைப் பற்றிச் சில கருத்துக்களை இயம்புவோம்.

**வைணவம்**

ச்ரிய: பதியான எம்பெருமானுக்குப் பரம், வியூகம், விபவம், அந்தர்யாமித்வம், அர்ச்சை என்று ஐந்து நிலைகள் உண்டு. 1. பரம் என்பது, எம்பெருமான் வைகுந்தத்தில் எழுந்தருளியிருக்கும் நிலை. 2. வியூகம் என்பது, திருப்பாற்கடலில் காட்சியளிக்கும் நிலை. 3. விபவம் என்பது, ராமன் கிருஷ்ணன் முதலிய அவதாரத் திருமேனிகள் பற்றிய நிலை. 4. அந்தர்யாமித்வம் - ஒவ்வொருவருடைய இதயத்திலும் அமர்ந்து ஜீவாத்மாவை நியமித்து நிற்கும் திருமேனி. இதை யோகத்தால் தான் பெற முடியும். 5. அர்ச்சாமூர்த்தி - அங்காங்கே திவ்யதேசங்களில் எழுந்தருளியிருக்கும் நிலை.

1. பரம் — பாட்டுக் கேட்கும் இடம்— சாமகானம் கேட்கும் திருநாடு.

2. வியூகம் — கூப்பீடு கேட்கும் இடம்— சம்சாரிகளின் விண்ணப்பம் கேட்டுக் கண் வளரும் திருப்பாற்கடல்.

3. விபவம்—குறித்த இடம்—அவதாரத்திற்காக இழிந்த நிலை.

4. அந்தர்யாமித்வம்—வளைத்த இடம்— மனதில் திருமேனியுடன் தங்கும் இடம்.

5. அர்ச்சாமூர்த்தி—ஊட்டும் இடம்— கைங்கர்யாவதாரத்திற்கு உகந்த மூர்த்தி வழிபாடு. இந்த ஐந்தாவது நிலையைப் 'பின்னானார் வணங்கும் இடம்' என்றும் கூறுவதுண்டு. முன்னைய நான்கு நிலைகளாகிய 'பரம், வியூகம், விபவம், அந்தர்யாமித்வம் என்ற நிலைகளுக்குப் பின் வருவதனால் இந்தப் பெயர் வருவதாயிற்று.

வழிபடு தெய்வம் வைணவத்திற்குத் திருமாலே என்றாலும், திவ்யப் பிரபந்தம் முழுவதிலும் சமரசமான எண்ணங்கள் பல

ஆழ்வார்களால் பெய்யப்பட்டுள்ளன. ஆழ்வார்களில் தலைசிறந்த நம்மாழ்வாரும்,

வணங்கும் துறைகள் பலபல ஆக்கி மதிவிகற்பால்
பிணங்கும் சமயம் பலபல ஆக்கி அவை அவைதோறும்
அணங்கும் பலபல ஆக்கி நின்மூர்த்தி பரப்பி வைத்தாய்
இணங்கும் நின்னோரை இல்லாய் நின்கண் வேட்கை எழுவிப்பனே

என்று குறிப்பிட்டுள்ளார்.

ஆண்டாள், பொய்கையாழ்வார், பேயாழ்வார், மாணிக்கவாசகர், திருநாவுக்கரசர் ஆகியோரது பாடல்களிலும் சமரசக் கருத்துக்கள் இடம் பெற்றுள்ளன.

இந்தக் கட்டுரையில் நம் சிந்தனைக்கு உரிய பாவைகள் இரண்டு என்றாலும், நூல்கள் சைவ வைணவச் சார்புடையவை என்றாலும், பாடிய ஆசிரியர்களும் காலமும் வெவ்வேறு என்றாலும் இந்த நூல்கள் இரண்டும் நுதலும் பொருள் ஒன்றே.

**ஆண்டாள்**

ஆண்டாள் பெரியாழ்வார் பெற்ற பெண் பிள்ளையாய் ஸ்ரீவில்லிபுத்தூரில் அவதரித்து, மானிடவர்க்குப் பேச்சுப்படில் வாழாத தன்மையளாய், கோல்தேடி ஓடும் கொழுந்தே போன்று மால் தேடி ஓடும் மனம் கொண்டவளாய், இனிக் கண்ணன் உலாவிப் போன அடிச்சுவடும், அவனும் பெண்களுமாகத் திளைத்த யமுனையும், அவன் எடுத்த கோவர்த்தனமும் கிடந்ததாகில் அவற்றைக் கண்டாகிலும் தரிப்போம் என்று ஸ்ரீவில்லிபுத்தூரையே ஆய்ப்பாடியாகவும், அங்குள்ள பெண்களை இடையர் பெண்களாகவும், தானும் அவர்களிலே ஒருத்தியாகவும், உள்ளே இருப்பவன் கிருஷ்ணனே என்றும் எண்ணிக்கொண்டு, அனுராகம் முற்றி, அவைதாமே ஆய், இடைநடையும், இடைமுடியும், இடைப்பேச்சும், முடைநாற்றமுமாய்விட்ட நிலையில் பாசுரங்களைப் பாடினாள் என்பர்.

ஆண்டாளைக் கோதை என்றும், சூடிக்கொடுத்த சுடர்க்கொடி என்றும், திருப்பாவை பாடிய செல்வி என்றும் சிறப்பித்துப் பேசுவதுண்டு.

**மாணிக்கவாசகர்**

இதே போல் மாணிக்கவாசகரும் பெரிதும் சிறப்புடையவராகத் திகழ்ந்தார். இவருடைய பாடல்களைப் புகழ்ந்து சிவபெருமானே 'மணிவாசகம்' என்று கொண்டாடினார். இவருக்கு உபதேசம் செய்வதற்கென்றே திருப்பெருந்துறையில் காத்திருந்து, திருவடி தீட்சையும் உபதேசமும் செய்தார். திருவாசகத்தையும் திருச்சிற்றம்பலக் கோவையையும் பாடும்படி ஆணையிட்டு, மாணிக்கவாசகர் பாடியபோது தாமே ஏடும் எழுத்தாணியும் கொண்டு எழுதிப் பின் திருச்சிற்றம்பலவன் என்று திருச்சாத்து இட்டு, மூவாயிரவர் மூலமாக அவற்றை வெளிப்படுத்தினார். அவர்தம் வாக்கு மெய்ப்பாடு படர, உள்ளம் கசிந்து, கண்ணீர் சோரப் பாடப்பெற்றவையாகும்.



சிவபெருமானே மாணிக்கவாசகரது பாடல்களைக் கேட்கக் கைலாசத்தை விட்டுப் பாண்டிநாடு போந்து, கூலியாளாகப் பணியாற்றி, அரசனால் அடிக்கப்பெற்று, அந்த அடி சராசரங்களின் மீது பட, துன்புற்றும் துவளாது, அந்தப் பாடல்களைக் கேட்டு மகிழ்ந்தனன் என்பர்.

**பாட்டின் சிறப்பு**

சிவாலயங்களில் மார்கழித் திருவாதிரையை இறுதியாகக் கொண்ட பத்து நாட்களில் திருவெம்பாவையைத் தவிர வேறு பன்னிரு திருமுறைகளுள் எந்தப் பகுதியையும் ஓதக்கூடாது என்ற கட்டுப்பாடு உள்ளது. இதனைத் 'திருவெம்பாவைக் காப்பு' என்பர். இந்த நூல் சிறப்பாகத் தமிழ்மன்னர் மூவர் முடிசூட்டு விழாவிலும் ஓதப்பெற்றது என்றும், நாட்டில் நடைபெற்ற மன்னர் அரசியல் சடங்குகளிலும் ஓதப்பெற்றது என்றும் அறிகிறோம்.

### பாட்டின் பொருட்சிறப்பு

பொதுவாக, சைவசித்தாந்தம் கூறும் சாத்திர நுட்பங்கள் அனைத்தையும் திருவெம்பாவையில் காணலாம். முப்பொருள் உண்மை, பசு-பதி-பாசம் என்பவற்றின் இலக்கணங்களும் உயிர்களுக்கும் உலகத்திற்கும் உள்ள தொடர்பு, உயிர்களைப் பற்றிய விவரங்கள், மும்மலங்களை ஒழிக்கும் உபாயங்கள், பாச நீக்கம், சிவப் பேறு முதலிய பலப் பல நுட்பமான விஷயங்கள் பேசப்படுகின்றன. இதே போல் திருப்பாவையிலும் மார்கழி நீராடுதல் என்ற இலட்சியத்தைக் கொண்டு, நோன்பு என்ற ஒரு வியாஜத்தாலே, எம்பெருமானுக்கு ஆட் செய்வதே பரம புருஷார்த்தம் என்று இயம்பப்படுகிறது.

### இரண்டு பாவைகளின் சாரமும் ஒன்றே

இரண்டு பாவைகளும் சம்சாரத்தின் அந்தகாரத்தில் உறங்குகிறவர்களை எழுப்பி அவர்களை அஞ்ஞானத்திலிருந்து ஞான உலகத்திற்கு அழைத்துச் செல்லும் பாசுரங்களாக அமைந்துள்ளன. ஆண்டவனின் நாமத்தைச் சொல்லி நீராடுவதும், பெண்கள் ஒருவரை ஒருவர் எழுப்பி மார்கழி நீராடி ஆய்ச்சியர் கண்ணபிரானையும், சிவநேசச் செல்வியர் சிவனடியாரையும் நாயகர்களாய் அடையப் பிரார்த்திப்பதும், நாடு செழிக்க மழை பெய்ய வேண்டும் என்று கோருவதும் இவற்றின் நோக்கங்களாக இருக்கின்றன.

முன்னிக் கடலைச் சுருக்கி<br>எழுந்துடையாள்<br>என்னத் திகழ்ந் தெம்மை யாளுடையா<br>ளிட்டிடையின்<br>மின்னிப் பொலிந்தெம் பிராட்டி<br>திருவடிமேற்<br>பொன்னஞ் சிலம்பிற் சிலம்பித்<br>திருப்புருவம்<br>என்னச் சிலைகுலவி நந்தம்மை<br>யாளுடையாள்<br>தன்னிற் பிரிவிலா எங்கோமா னன்பர்க்கு<br>முன்னிய வள்நமக்கு முன்சுரக்கு<br>மின்னருளே<br>என்னப் பொழியாய் மழையேலோ<br>ரெம்பாவாய்.<br>—திருவெம்பாவை.

மேகமே! கடலை நெருங்கி நீரை முகந்து, வானத்தின்மேல் எழுந்து எம்மை உடையவளாகும் உமாதேவியார் திருமேனியைப் போல, கருநிறமாக விளங்கி, உமாதேவியாரின் சிறிய இடை போன்று மின்னலைச் சார்ந்து விளங்கி, தேவியாரின் திருவடிகளில் அணியப்பெற்ற பொன்னாலாகிய சிலம்பைப் போல் இடி இடித்து விளங்கி, உமாதேவியாரது திருப்புருவம் என்று விளங்கும்படி வானவில்லை விளங்க நிறுத்தி, நீக்கமின்றி நிற்கிற எமது தலைவியும், தலைவர்களும், சிவபெருமானும், சக்தியாகிய உமையம்மையும் கொள்ளும் இரக்கம் போல் அருள் பொழிவாயாக.

ஆழிமழைக் கண்ணா! ஒன்றும் நீகைகரவேல்<br>ஆழியுள் புக்கு முகந்துகொடு ஆர்த்தேறி<br>ஊழிமுதல்வ னுருவம்போல் மெய்கறுத்து<br>பாழியந் தோளுடைப் பற்பநா பன்கையில்<br>ஆழிபோல் மின்னி வலம்புரிபோல்<br>நின்றதிர்ந்து<br>தாழாதே சார்ங்க முதைத்த<br>சரமழைபோல்<br>வாழ உலகினில் பெய்திடாய் நாங்களும்<br>மார்கழி நீராட மகிழ்ந்தேலோ<br>ரெம்பாவாய்.<br>—திருப்பாவை.

கடல் போல் மழைக்குக் கம்பீரமான தேவதையே! கையிருப்பாக நீ ஒன்றையும் ஒளித்து வைத்துக்கொள்ளாதே. கடலுள் புகுந்து, நீரை முகந்துகொண்டு, ஆரவாரம் செய்து வானத்தில் ஏறி, காலம் முதலிய எல்லாவற்றுக்கும் முதல்வனான எம்பெருமானது திருமேனி போல் உடம்பு கறுத்துத் தோன்றி, வலிமைபொருந்திய அழகிய தோள்களையுடைய எம்பெருமானுடைய கையிலுள்ள சக்கரம் போல் மின்னி, வலம்புரிச் சங்கு போல் நிலையாக எம்பெருமான் கையிலுள்ள சார்ங்கம் என்னும் வில் உதைத்துத் தள்ளிய அம்புமழை போல, உலகத்தில் எல்லோர்க்கும் வாழ்வு உண்டாகவும், நோன்பு நிலவவும் நாங்களும் மகிழ்ந்து மார்கழி நீராடத் தாமதியாமல் பெய்வாயாக.

''இறைவா! மழை போல் எம்பெருமானுடைய அருளும் இறங்கி வந்து நாட்டையும்

மக்களையும் வாழ்விக்க வேண்டும்'' என்று வேண்டுகின்றனர். இந்தப் பாடல்கள் அனைத்தும் அகத்துறைப் பாடல்களாக வலிவு பெறுகின்றன. பெண்டிர் சிறந்த முறையில் திருமணம் செய்துகொண்டு நல் வாழ்வு வாழ வேண்டும் என்று அவாவு கின்றனர். மாணிக்கவாசகர் முத்துநகைப் பெண்களைப் பார்க்கிறார். வண்ணக்கிளி மொழியாரைக் காண்கிறார். மான் போல் மருண்டு பார்த்துக்கொண்டே மகிழ்வுடன் துள்ளிச் செல்பவர்களைப் பார்க்கிறார். இவர்கள் அனைவரும் சித்தத்திலும் அழகிய வர்களாய்ச் சிவபக்தியுடன் திகழ்வதையும் பார்க்கிறார். இவர்களுக்கு நல்ல கணவன் மார் அமைய வேண்டுமே என்று நினைக் கிறார். இந்த நினைப்பு திருவெம்பாவையில் இரண்டு அழகிய பாடல்களில் மிளிர்கிறது.

திருவாசகமும் திவ்யப் பிரபந்தமும் அகத் துறைப் பாடல்களே என்பர் அறிஞர். இவற்றை ஆங்கில அறிஞர் 'Bridal mysticism' என்பர். 'புருஷோத்தமன் ஒருவனே; ஆன்மாக்கள் அனைத்தும் அவனை அடைய விரும்பும் பெண் வடிவங்களே' என்பது இதன் பொருள். நம் வாழ்க்கை யின் நோக்கம், வீடும் வாழ வேண்டும்; நாடும் வாழ வேண்டும் என்பது. 'எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே அல்லாமல் வேறொன்று அறியேன் பராபரமே' என்பார் தாயுமானவர்.

இந்த இரண்டு பாவைகளிலும் உறங்கும் நங்கையரும் உணர்த்தும் நங்கையரும் வரு கின்றனர்.

ஆன்மா மலங்களில் கட்டுண்டு உறங்கிக் கிடக்கிறது. இதனை எழுப்பிப் பாசத்தை நீக்கி நல்லாறுபடுத்தி நாயகனிடம் சேர்க்க வேண்டும். இதனை உபநிடதம், ''எழுந்திரு, விழிப்புடன் கடமைகளைச் செய். இலட்சி யத்தை அடையும் வரை சென்றுகொண்டே இரு; நிற்காதே'' என்கிறது. கண்ணைத் துயின்று அவமே காலத்தைப் போக்காமல், விண்ணுக்கு ஒரு மருந்தை, வேதவிழுப் பொருளை, கண்ணுக்கு இனியானைப் பாடிக் கசிந்து உள்ளம் உருக வேண்டும்.

திருப்பாவை, திருவெம்பாவையின் சாரம் எல்லாம் பிழியப்பட்டிருக்கும் இடம் திருப்பாவையின் 29-ஆம் பாட்டிலும், திரு வெம்பாவையின் 19-ஆம் பாட்டிலுமே யாம். உலக ஆசைகளால் உந்தப்பெற்று, மழை வேண்டியும் மணாளரை வேண்டியும், உண்ணும் சோறும் பருகும் நீரும் வேண்டி யும் வந்த கன்னிப் பெண்கள் இப்போது அவற்றை முழுவதும் மறந்து, ''இறைவா! இப்போது உன்னைத் தவிர யாம் எதையும் விரும்பவில்லை. ஆசைகளற்று அடைக்கல உணர்வோடு வந்துள்ளோம். நீயே கதி. உன் சித்தமே நிறைவேறட்டும்'' என்கின்றனர்.

''இறைவா! இதுவரை உலக ஆசை களிலே உந்தப்பெற்று உன்னை நோக்கி வந் தோம். இனி அந்த ஆசை அனைத்தையும் துறந்துவிட்டோம். இனி ஒரே ஓர் ஆசை உண்டு: அதுதான் எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்தன்னோடு உறவுகொண்டு, உன்னையே வழிபட்டு உன்னிடமே அடைக் கலம் புகுவது.''—இதைத்தான் வைஷ்ணவ சமயம் சரணாகதி என்றும் பிரபத்தி என்றும் கூறுகிறது.

திருப்பாவையும் திருவெம்பாவையும் வேறு வேறு தெய்வச் சார்புடையவை ஆயினும் ஒரே பொதுக் குறிப்புடையன என்று காலஞ்சென்ற பேராசிரியர் மு. ராகவ ஐயங்கார் கூறுவது உண்மையே.

திருவெம்பாவை பல ஆயிரம் ஆண்டு களுக்கு முன்பே கடல்கடந்த நாடுகளுக்குச் சென்று நிலைத்துவிட்டது. தமிழ்நாட்டின் மூவேந்தர்களும் இதனைப் போற்றினர்.

திருப்பாவையும் திருவெம்பாவையும் பக்திப் பூங்காவை அழகு செய்யும் வாடாத கவிதைப் பூங்கொத்துக்கள். ஆதியும் அந்த மும் இல்லா அருட்பெருஞ்சோதியை வாயி னால் பாடி, மனத்தினால் சிந்தித்துக் 'காலமே கடவுள்' என்பதை உணர்ந்து, மாதங்களில் சிறந்த மாதமான மார்கழியில் மாணிக்க வாசகர் இயம்பிய திருவெம்பாவையையும், ஆண்டாள் அருளிய திருப்பாவையையும் முப்பது நாளும் தப்பாமே பாடி, 'நாமங்கள் இரண்டு என்றாலும் நற்பொருள் ஒன்றே' என்று இவ்விரு தெய்வங்களையும் போற்றி வாழ வேண்டும். ●

# பரமார்த்தப் பிரசங்கம்

சுவாமி விரஜானந்தர்

"என்னால் எதுவும் செய்ய முடியாது", "நான் ஒன்றுமே செய்யமாட்டேன்", "நீ எனக்காக அந்தக் காரியத்தைச் செய்தால் தான் அந்தக் காரியம் நடைபெறும்"—இவையெல்லாம் ஆண்மையே இல்லாதவர் பேசுகிற பேச்சாகும். "என் வாயில் உணவைக் கொண்டு வந்து ஊட்ட வேண்டும். அப்படி நீ செய்தால்தான் நான் அந்த உணவைச் சாப்பிடுவேன்" என்று அவர்கள் சொல்வார்கள். இத்தகைய மனப்பான்மை கொண்டவர்கள் இறந்து போய்விடுவதே நல்லது. அப்படி அவர்கள் இறந்துபோவது அவர்களுக்கும் நல்லது, சமுதாயத்திற்கும் நல்லது. ஏன், இயற்கையின் விதியையொட்டி அவர்கள் இறந்துதான் போகிறார்கள். சிறிது சிறிதாகவும் நிரந்தரமாகவும் அவர்கள் வலிமையை இழந்து இறந்துபோகிறார்கள்.

சதா சர்வகாலமும் பிறருடைய உதவியை எதிர்பார்த்து நிற்பது மரணத்திற்கு ஒப்பானது. கண்ணுக்குப் புலப்படக்கூடிய அல்லது கண்ணுக்குப் புலப்படாமல் மறைந்திருக்கக்கூடிய ஒரு புறச்சக்தியின் உதவியையே எப்போதும் நாடியிருப்பது மரணம் போன்றதே ஆகும்.

சுதந்திரமாக வாழும் வாழ்க்கை சொர்க்கம் போன்றது. பிறரைச் சார்ந்து வாழும் வாழ்க்கை நரகம் போன்றது.

○ ○ ○

கர்மவினை பற்றிய கருத்தை ஒருவன் ஏற்றுக்கொள்வதனாலேயே அவன் அதிர்ஷ்டவாதியாக (Fatalist) இருக்க வேண்டுமென்று கட்டாயமா என்ன? ('விதிப்படியே எல்லாம் நடைபெறுகிறது, நமக்கென்று சுதந்திரம் எதுவும் தனியாக இல்லை' என்று நம்புபவன் அதிர்ஷ்டவாதி எனப்படுவான்.)

இந்தக் கர்மவினை பற்றிய கருத்து, மனிதனின் முக்தி என்பதையே என்றென்றும் முழங்கி வந்திருக்கிறது.

என் தீய செயல்களினால் நான் என்னைப் பந்தத்திற்கு உட்படுத்திக்கொண்டு என்னை இழிந்தவனாக்கிக் கொண்டேன் என்பது உண்மையானால், நற்செயல்களினால் என்னை நான் உயர்த்திக்கொள்ள முடியும் என்பதும் முற்றிலும் உண்மையே ஆகும்.

என்னை நான் பந்தப்படுத்திக்கொள்ள இயலுமானால், என்னை நான் பந்தத்திலிருந்து விடுவித்துக்கொள்வதையும் நிச்சயம் என்னால் செய்ய முடியும். இருக்கும் வேறுபாடெல்லாம் சிந்தனைக்கும் செயலுக்கும் உள்ள வேறுபாடு மட்டுமே ஆகும்.

தூய சங்கற்பம், சத் கர்மம், தார்மிக வாழ்க்கை ஆகியவற்றின் மூலம் தீய வினைகளினால் ஏற்பட்ட பந்தபாசங்களை அறுத்தெறிந்து நம்மால் ஏன் முக்தி பெற இயலாது? நிச்சயம் நம்மால் முக்தி பெற முடியும்.

முக்தியைப் பெறுவதற்கு உரிய வாய்ப்பு என்றைக்குமே கிடைக்காது என்று இருந்திருக்குமேயானால், மனித இனமே பெரும் பித்தேறிப் போயிருக்கும்!

அது மட்டுமின்றி, தீய வழியில் செல்வதனால் நமக்கு அதிக லாபம் கிடைக்கும் அல்லது சுயநலன்களை நாம் மேலும் அதிகமாகப் பெருக்கிக் கொள்ளலாம் என்று மட்டும் இருந்திருக்குமேயானால், நாம் நல்ல செயல்களைச் செய்வதற்கு ஏன் முயற்சி செய்ய வேண்டும்? நம்மை நாமே தியாகம் செய்துகொண்டு ஆன்மிக வாழ்க்கையில் முன்னேற வேண்டும் என்று நாம் ஏன் பாடுபட வேண்டும்?

தீய செயல்களின் மூலம் சுயநலத்தைப் பெருக்கிக்கொள்ளவும், அதிக லாபத்தைப் பெறவும் இயலும் என்று இருந்திருக்குமேயானால், உலகிலிருந்தே எல்லா தார்மிகச் சிந்தனைகளும் நல்லவையும் தயையும் அன்பும் சகோதர உணர்வும் மறைந்தே போயிருக்கும்; மனிதர்கள் தங்களை வெறும் மிருகங்களாகவே ஆக்கிக்கொண்டிருந்திருப்பார்கள்.

○ ○ ○

# செய்திகள்

☐ பெரம்பூர், 'நேதாஜி நற்பணி மன்றம், ஜனவரி 23-ஆம் நாள் விவேகானந்த ஜயந்தியைக் கொண்டாடியது. விழாவில் 'விவேகானந்தர் இளைஞர்களுக்கு வழங்கிய செய்தி' என்ற தலைப்பில் சுவாமி கமலாத்மானந்தர் உரையாற்றினர்.

☐ சிவகாசி, ஸ்ரீசுவாமிஜி சன்மார்க்கப் பேரவையின் சார்பாகச் சிவன் கோவிலில் ஜனவரி 23, 24, 25 தேதிகளில் இரவு 7-45 மணி முதல் 9-15 மணி வரை சுவாமி ராகவேசானந்தரின் பகவத்கீதை உபந்நியாசம் நடைபெற்றது.

☐ சிவகாசி, திருஞான சம்பந்தர் சங்கத்தில் ஜனவரி 26-ஆம் நாள் 'குருபக்தி' என்ற தலைப்பில் சுவாமி ராகவேசானந்தர் உரையாற்றினர்.

☐ வேப்பேரி, திருவொற்றீசுவரர் உயர்நிலைப் பள்ளியின் ஆண்டு விழா ஜனவரி 25-ஆம் நாள் கொண்டாடப் பெற்றது. விழாவிற்கு சுவாமி கமலாத்மானந்தர் தலைமை வகித்து உரை நிகழ்த்தினர்.

☐ மதுரை, நாராயணபுரத்தில் ஸ்ரீராமகிருஷ்ண நினைவு ஆய்வு நிலையம் ஜனவரி 30, 31 தேதிகளில் ஜயந்தி விழாக்களைக் கொண்டாடியது.

ஜனவரி 30-ஆம் நாள் மாலை 5 மணிக்கு ஸ்ரீராமகிருஷ்ண ஜயந்தியும், அன்னை ஸ்ரீசாரதாதேவியின் ஜயந்தி விழாவும் கொண்டாடப் பெற்றன. டாக்டர் எஸ். சண்முகம் வரவேற்புரை வழங்கினர். சுவாமி தபஸ்யானந்தர், சுவாமி சர்வக்ஞானந்தர், சுவாமி கமலாத்மானந்தர் ஆகியோர் உரையாற்றினர். இரவு 9 மணிக்கு ஸ்ரீசாரதாதேவியின் வரலாற்றை விளக்கும் திரைப்படம் திரையிடப் பெற்றது.

ஜனவரி 31-ஆம் தேதி காலை 10 மணிக்கு சுவாமி தபஸ்யானந்தர் சுவாமிஜி 'புற்று நோய் நீக்கும் கட்டிடம்' என்ற புதிய கட்டிடத்தைத் திறந்து வைத்தார். சுவாமி தபஸ்யானந்தர், சுவாமி தன்மயானந்தர், சுவாமி சர்வக்ஞானந்தர், டாக்டர் எஸ். சண்முகம், மேயர் எஸ்.கே. பாலகிருஷ்ணன், மாவட்ட ஆட்சித் தலைவர் கே. ஆலுடைய பிள்ளை, கமிஷனர் ஸ்ரீபதி, காவல்துறையைச் சேர்ந்த D. I. G. பாஸ்கரா, சங்கே கோயி ஆகியோர் உரையாற்றினர்.

☐ மதுரை, மீனாக்ஷி அம்மன் கோயிலிலுள்ள திருவள்ளுவர் கழகம் 31-1-82 ஞாயிறு மாலை 6-30 மணிக்கு விவேகானந்த ஜயந்தி விழாவைக் கொண்டாடியது. டாக்டர் எஸ். சண்முகம், சுவாமி தபஸ்யானந்தர், சுவாமி சர்வக்ஞானந்தர், சுவாமி கமலாத்மானந்தர் ஆகியோர் 'விவேகானந்தரின் நடைமுறை வேதாந்தம்' என்ற தலைப்பில் உரை நிகழ்த்தினர்.

☐ சிவகாசி, சுவாமிஜி சன்மார்க்கப் பேரவை 1-2-82-ஆம் நாள் அணில் பாபநாச நாடார் கல்யாண மண்டபத்தில் ஒரு நாள் அந்தர்யோகத்திற்கு ஏற்பாடு செய்திருந்தது. காலை 9-மணி முதல் மாலை 5-15 வரை நடைபெற்ற இந்த அந்தர்யோகத்தில் சுவாமி தபஸ்யானந்தர், சுவாமி கமலாத்மானந்தர், சுவாமி தன்மயானந்தர் ஆகியோரின் ஆன்மிக உரைகள் இடம் பெற்றன.

☐ சிவகாசி, திருஞான சம்பந்தர் சங்கத்தில் பிப்ரவரி 2-ஆம் நாள் 'அன்னை ஸ்ரீசாரதாதேவியார்' என்ற தலைப்பில் சுவாமி கமலாத்மானந்தர் உரையாற்றினர்.

☐ சிவகாசி, சுவாமிஜி சன்மார்க்கப் பேரவையினர் உயர்நிலைப் பள்ளி மாணவிகளுக்கு கீதைக் கட்டுரைப் போட்டி நடத்தினர். பிப்ரவரி 2-ம் நாள் கீதைக் கட்டுரைப் போட்டியில் கலந்து கொண்ட 103 மாணவிகளுக்குப் பரிசுகள் வழங்கி சுவாமி கமலாத்மானந்தர் கீதையைக் குறித்து உரை நிகழ்த்தினர்.

☐ மயிலாப்பூர், பி. எஸ். உயர்நிலைப் பள்ளியில் பிப்ரவரி 6, 7 தேதிகளில் ஹிந்து ஒற்றுமை எழுச்சி மாநாடு நடைபெற்றது. 'விவேகானந்தர் வழியில் ஹிந்து மறுமலர்ச்சி' என்ற தலைப்பில் சுவாமி கமலாத்மானநதர் உரையாற்றினர்.

# ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004

## 1982 மார்ச் மாத நிகழ்ச்சிகள்

**சத் சங்கம்:** ஞாயிறுதோறும் மாலை 4 மணி முதல் 5-30 மணி வரை
ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் (7-3-82 & 28-3-82)
ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாம பாராயணம் (21-3-82)

### சொற்பொழிவுகள்—தமிழ்

| | |
|---|---|
| 7-3-82 | 1. இராமாயணம்—திரு ஆர். கோதண்டராமன். |
| 21-3-82 | 2. ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமம் —திரு வி. ஆர். கல்யாணசுந்தர சாஸ்திரிகள். |
| 28-3-82 | 3. ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் —திரு. வி. எஸ். வி. குருஸ்வாமி சாஸ்திரிகள். |

மாலை 5-35 மணி முதல் 6-30 மணி வரை சுவாமி கபீரானந்தர் 'பக்தி ரத்தினவளி' என்ற தலைப்பில் ஞாயிற்றுக்கிழமைகளில் ஆங்கிலத்தில் உரை நிகழ்த்துவார்.

வார நாட்களில் நடைபெறும் சொற்பொழிவுகள் மாலை 5-30 மணிக்கு

| | | |
|---|---|---|
| 1. | திங்கள் | ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசம்—சுவாமி அமிர்தானந்தர் |
| 2. | செவ்வாய் | ஆத்மபோதம்—சுவாமி பிரசாந்தானந்தர் |
| 3. | புதன் | ஆன்மிக வாழ்க்கை—சுவாமி கமலாத்மானந்தர் |
| 4. | வியாழன் | பகவத்கீதை—பிரம்மசாரி சின்மய சைதன்யா |
| 5. | வெள்ளி | துளசி இராமாயணம்—சுவாமி வீதபயானந்தர் |
| 6. | சனி | இராமாயணம்—ஜஸ்டிஸ் டி. ராமகிருஷ்ணன் (6-3-82 மட்டும்) |

மாலை வழிபாட்டிற்குப் பிறகு இரவு 7 மணிக்கு 'ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசங்கள்' என்ற தலைப்பில் சனிக்கிழமைகளில் சுவாமி கபீரானந்தர் ஆங்கிலத்தில் உரை நிகழ்த்துவார்.

**விசேஷ தினங்கள்:**

| | |
|---|---|
| 9-3-82 | செவ்வாய் ஸ்ரீசைதன்ய ஜயந்தி—டோல் பூர்ணிமா |
| 14-3-82 | ஞாயிறு ஸ்ரீசைதன்ய ஜயந்தி — பொதுக் கூட்டம்<br>தலைவர்: சுவாமி கபீரானந்தர்<br>பேசுபவர்: சுவாமி தன்மயானந்தர் |
| 13-3-82 | சனிக்கிழமை சுவாமி யோகானந்த ஜயந்தி |

6-3-82 & 21-3-82 ஆகிய ஏகாதசி தினங்களில் மாலை வழிபாட்டிற்குப் பிறகு ஸ்ரீராமநாம சங்கீர்த்தனம் நடைபெறும்.

வேறு சில நிகழ்ச்சிகள் :

மாதந்தோறும் முதல் ஞாயிற்றுக்கிழமையும் மூன்றுவது ஞாயிற்றுக்கிழமையும் காலை 10 மணிக்கு சுவாமி விபுதானந்தர் உரை நிகழ்த்துவார். இடம்: ஸ்ரீராமகிருஷ்ண-விவேகானந்த மன்றம், அரக்கோணம்.

மாதந்தோறும் இரண்டாவது சனிக்கிழமைகளில் மாலை 5-30 மணிக்கு சுவாமி விபுதானந்தர் உரை நிகழ்த்துவார். இடம்: 7, கெல்லீஸ் ரோடு, கீழ்ப்பாக்கம், சென்னை.

மாதந்தோறும் கடைசி ஞாயிற்றுக்கிழமைகளில் மாலை 5-30 மணிக்கு சுவாமி விபுதானந்தர் உரை நிகழ்த்துவார். இடம்: 34/1, எண்ணூர் நெடுஞ்சாலை, சென்னை-19.

மாதந்தோறும் மூன்றுவது ஞாயிற்றுக்கிழமைகளில் காலை 9-30 மணிக்கு 'ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசங்கள்' என்ற தலைப்பில் திரு வி. ராமமூர்த்தி உரை நிகழ்த்துவார். இடம்: H 28/F காமராஜர் நகர், திருவான்மியூர், சென்னை-41.

மாதந்தோறும் கடைசி ஞாயிற்றுக்கிழமைகளில் காலை 9-30 மணிக்கு, பெரம்பூர் அன்னதான சமாஜத்தைச் சேர்ந்த சுவாமி விவேகானந்தர் நூற்றுண்டு நினைவு மண்டபத்தில் 'ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசங்கள்' என்ற தலைப்பில் திரு வி. ராமமூர்த்தி உரை நிகழ்த்துவார்.

எல்லா ஞாயிற்றுக்கிழமைகளிலும் மாலை 4-15 மணிக்கு சுவாமி ராகவேசானந்தர் அவர்கள் 'ஸ்ரீசாரதாதேவியார்' என்ற தலைப்பில் சொற்பொழிவு நிகழ்த்துவார். இடம்: 18, 1-ஆவது லேன், சாஸ்திரி நகர், சென்னை-20.

அனைவரையும் அனைத்து நிகழ்ச்சிகளிலும் கலந்துகொள்ளுமாறு அன்புடன் அழைக்கிறோம்.

தலைவர்
ஸ்ரீராமகிருஷ்ண மடம்
சென்னை-600 004

தொலைபேசி 71231

ஆசிரியர் : சுவாமி தன்மயானந்தர், துணை ஆசிரியர் : கமலாத்மானந்தர்.
பதிப்பாளர் : சுவாமி தன்மயானந்தர், ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை-600 004.
அச்சிடுபவர் : கே. எல். செல்லப்பன், சுத்தானந்த அச்சகம், சென்னை-600 020.

